# கொலம்பியாவில்





D.K.பட்டம்மாள்

பாடியது

GE. 6045 — குமாரன் / திரைகடல்



## சிவலிங்க சாக்ஷி

டாக்கீ பாட்டுகள்

C.S.கணேச பாகவதர்
குமாரி மாசிலாமணி முதலியோர்

பாடியது



GE. 6048 — தேவா தேவா / பாரினில்

GE. 6049 — இன்ப வாழ்க்கை / பரம தயாளனே

GE. 6050 — வாழ்விலே / மங்களமே

## சதீ-சுகன்யா

டாக்கீ பாட்டுகள்

T.R.ராஜகுமாரி

பாடியது

GE. 6051

பாக்யசாலி நானே
மனமோஹன-
ராதே





**ஸரஸ்வதீ ஸ்டோர்ஸ்**
மவுண்ட் ரோட், மதராஸ்.

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடம் கிடைக்கும்:

கண்ணன் & கம்பெனி, திருச்சிராப்பள்ளி

அதிக தேக பலத்திற்கு உங்கள் ஆகாரங்களை

# டால்டாவினால்

தயார் செய்யுங்கள்

# DALDA






ஆயிரக் கணக்கான குடும்பத்தோர்கள் அதிக பலமுள்ளவர்களாயும், ஆரோக்கியமாகவும், சந்தோஷமுள்ளவர்களாகவும் இருக்கிறார்கள். ஏனெனில் அவர்களுடைய ஆகாரம் டால்டாவால் தயாரிக்கப் படுகிறது. அவர்களுக்கு அதிக தேக பலமும், வாழ்க்கையில் சந்தோஷமும், ருசிகரமான உணவும் கிடைக்கின்றன.

*இது ஏன்:* நீங்கள் சமையல் செய்யும் எந்த உணவுப் பொருளையும் டால்டா உயர்வாக்குகிறது. மற்ற உணவுப் பொருள்களில் இல்லாத ஜீவ சத்து டால்டாவில் அடங்கியுள்ளது. டால்டா உபயோகிக்கப் பட்ட உணவு மிக ருசிகரமாகவும், சீக்கிரம் ஜீரணிக்கக் கூடியதாகவும் இருக்கிறது. உங்களுக்கு உணவு மிகவும் இஷ்டமாயிருந்தால் அதிக நன்மை ஏற்படுகிறது.




- டால்டா மிகவும் சுத்தமானது
- டால்டாவில் மிருகக் கொழுப்பு இல்லை
- டால்டா விலைகுறைவு-வெகுநாட்கள் உபயோகிக்கக் கூடியது
- டால்டா முத்திரையிட்ட டின்களில் விற்கப்படுகிறது.

1 பவுண்டு, 2 பவுண்டு, 5 பவுண்டு, 10 பவுண்டு

- அதன் சுத்தத்திற்கு ரூ. 1,000 உத்தரவாதம்

டால்டாவினால், உங்கள் ஆகாரங்களை, பொரியல், சமையல் முதலியவை செய்யுங்கள்

HVM. 14-23 TM THE HINDUSTAN VANASPATI MANUFACTURING CO. LTD., BOMBAY

இப்பொழுது திரளான
மக்கள் கண்டுகளிக்கின்றனர்

# பாரகனில்

★

பக்திரஸம் மிகுந்த
உயரிய சித்திரம்

★



## வாஹினியின்

# பக்த போதன

| மூன்று காட்சிகள் | இரண்டு காட்சிகள் |
| --- | --- |
| வியாழன், வெள்ளி, சனி, ஞாயிறு<br>2-45, 6-15, 9-45-க்கு | திங்கள், செவ்வாய், புதன்<br>2-15, 6-15-க்கு |

நாகையா நடித்தது... டைரக்ஷன்... கே. வி. ரெட்டி, L. Sc. Hons

# கல்கி
# பொருளடக்கம்

மலர் 2 இதழ் 17 | 1943 ஜனவரி 10 | சித்திரபானு ஞு மார்கழி 26வ.








தமிழ் இசை இயக்கத்தின் பெருமை, பொறுப்பு அனைத்தையும் ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் தலையிலேயே சுமத்தி விடுவதென்று சிலர் சதியாலோசனை செய்திருப்பதாய்த் தோன்றுகிறது. உண்மையில், தமிழ் மக்களின் ஏகோபித்த உள்ள உணர்ச்சிதான் அந்த இயக்கத்துக்குக் காரணமாகும். அந்த உணர்ச்சியின் முக்கிய பிரதிநிதிகளில் ஒருவராக இருப்பதினாலேயே ராஜா ஸர் அவர்கள் இன்று தமிழ் மக்களின் அபிமானத்துக்குப் பாத்திரமாகியிருக்கிறார். இதற்கு முன்னால் எத்தனையோ லட்சக் கணக்கில் செய்த தர்மங்களைக் காட்டிலும், தமிழிசை இயக்கத்துக்கு அவர் அளித்த சில ஆயிரம் ரூபாய் நன்கொடை தமிழர்களின் உள்ளத்தை அதிகம் கவர்ந்துவிட்டது வெளிப்படை. குருட்டுத் தனமாகத் தமிழிசை இயக்கத்தைத் தாக்குகிற புண்ணியவான்கள் தமிழ் மக்களிடையில் ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியாரின் செல்வாக்கை ஒன்றுக்குப் பத்தாகப் பெருக்கி வருகிறார்கள். இப்படி எதிரிகளின் விரோதத் தாக்குதலினால் கூட நன்மையை அடைந்து வருகிறவர் எத்தகைய யோக ஜாதகக்காரராயிருக்க வேண்டும்?



கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்

# என்ன சேதி?

## பொறுங்கள்!

உணவுப் பொருள் நிலைமை சம்பந்தமாக நாட்டில் எழுந்துள்ள தாபக் கதறல்களுக்கும் பரிதாபக் கூக்குரல்களுக்கும் சர்க்கார் அப்படியொன்றும் செவி சாய்க்காமல் போய்விடவில்லை. "நாங்கள் எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டுதான் இருக்கிறோம்" என்று சர்க்கார் பதில் சொன்னார்கள். "கவனிப்பதைத் தவிர வேறு ஏதாகிலும் செய்ய முடியுமா?" என்று சில பிடிவாதக்காரர்கள் மேலும் கேள்விகள் கேட்கவே, சர்க்கார் பாடு கொஞ்சம் திண்டாட்டமாகத்தான் போயிற்று. "ஏன் கவலைப்படுகிறீர்கள்? நாங்கள் இருக்கும்போது நிலைமையாவது மிஞ்சுகிறதாவது!" என்று சர்க்கார் சொல்லிக் கூட, அவர்கள் விடுகிற வழியாயில்லை. "ஊரில் உணவுக்குத் திண்டாடும்போது வெளியூருக்கு என்னத்திற்காக அனுப்புகிறீர்கள்?" என்று கல்கத்தாவில் சர்க்கார் வர்த்தக மெம்பர் ஸ்ரீ என். ஆர். சர்க்காரை நேருக்கு நேராகக் கேட்டுவிட்டார்கள்.

ஸ்ரீ என். ஆர். சர்க்கார் அளித்த பதிலில் சில சுவாரஸ்யமான விஷயங்களைச் சொன்னார். இந்தியாவிலிருந்து அப்படியொன்றும் பிரமாதமாக உணவுப் பொருள்களை ஏற்றுமதி செய்துவிடவில்லையாம். மத்திய கிழக்கு, இலங்கை இந்த இரண்டு இடங்களுக்குந்தான் அரிசி ஏற்றுமதியாகிறதாம். இலங்கைக்கு 38,000 டன் அனுப்புவதாக ஒப்புக்கொண்டு இப்பொழுது 12,000 டன்தான் அனுப்பப்படுகிறதாம்.

மத்திய கிழக்குக்கு எவ்வளவு ஆயிரம் டன்கள் அனுப்பப் படுகிறதென்று வர்த்தக மெம்பர் என்ன காரணத்தினாலோ சொல்லவில்லை.

உணவு தானியங்களின் நிலைமை இப்படியே மூன்று மாதங்கள் இருந்தால் என்ன செய்வார்களாம் தெரியுமா? வெளிநாடுகளுக்கு உணவுப் பொருள்கள் ஏற்றுமதியாவதை அடியோடு நிறுத்தி விடுவார்களாம்.

இந்திய மகா ஜனங்கள் செய்ய வேண்டிய காரியமெல்லாம் மூன்று மாதங்கள் 'கம்'மென்று பொறுத்திருக்க வேண்டியது; மூச்சைப் பிடித்துக்கொண்டு அதுவரை காலத்தை ஓட்ட வேண்டியதுதான். அதற்கப்புறம் நல்ல காலத்தைத் தவிர வேறில்லை.

## பரம ஔஷதம்

உணவு நெருக்கடி தீர்ந்து நல்ல காலம் நமக்குச் சீக்கிரத்தில் வரும் என்பதைத் தெரிந்து கொண்டிருந்த போதிலும், சில பிரமுகர்கள் இந்தக் கஷ்ட காலத்தில்கூட நம்மைக் கைவிட்டுவிட மாட்டேன் என்கிறார்கள். "உணவு நெருக்கடியைத் தீர்ப்பதற்கு நான் யோசனை சொல்கிறேன்" என்று சொல்லிக் கொண்டு சமீபத்தில் நமது சென்னை சர்க்கார் அட்வைஸர் மிஸ்டர் ரூதர்போர்டு முன் வந்தார். "தினம் ஒருவேளை லங்கணம் போட்டு விடுங்கள். எல்லாம் சரியாய்ப் போய்விடும்" என்று அவர் கூறினார். இப்பொழுது ஸிந்து மந்திரி ஒருவர் "அதிகமாகச் சாப்பிடாதீர்கள்" என்று கதறுகிறார்.

"லங்கணம் பரம ஔஷதம்" என்று தமிழ்நாட்டில் ஒரு பழமொழி உண்டு. ஒரு நாள் ஒருவேளை லங்கணம் கிடப்பதால் உணவுப் பொருள் பஞ்சத்திற்குச் சிறந்த ஔஷதமாயிருக்குமென்று மேற்படி பிரமுகர்கள் நிச்சயமாகச் சொல்வார்களானால், அதை நாம் ஏற்றுக் கொள்கிறோம். ஆனால், ஒருவேளை லங்கணத்தை விட, மூன்று வேளையும் உண்ணாவிரதத்தைக் கைக்கொண்டால் உணவுப் பஞ்சம் சர்வ நிச்சயமாகத் தீர்ந்து விடுமென்று தோன்றுகிறது. இந்த அற்பத் தியாகத்தைச் செய்யும்படி பொது ஜனங்களை அவர்கள் வற்புறுத்துவார்களென்று எதிர் பார்க்கிறோம். ஏனெனில், இந்திய ஜனங்களின் ஜீவன் முக்கியமானதென்று கருதியிருந்தால், ஏற்கெனவே அரை வயிறு சாப்பிட்டு உலர்ந்து போயிருப்பவர்களைப் பார்த்து, "அதிகமாகச் சாப்பிடாதீர்கள்" என்று யோசனை சொல்லியிருப்பார்களா?

---

**ஐந்து ரூபாய் பரிசு:** சென்ற இதழின் காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: ஸ்ரீ. ராஜாராம், 70. டட்ஸ் கார்டன், பெரம்பூர்.

# பத்திரிகை யுத்தம்

முதல் முதலின் அச்சு இயந்திரத்தைக் கண்டு பிடித்தவன் உலகத்தில் ஒரு புதிய மகா சக்தியை — ஒரு பெரும் பூதத்தை — சிருஷ்டிக்கிறோமென்று எண்ணியிருக்க மாட்டான். கல்வி அபிவிருத்திக்கும் அறிவு வளர்ச்சிக்கும் ஒரு சாதனத்தைக் கண்டு பிடித்ததாகவே நினைத்திருப்பான். அச்சியந்திரம் புத்தகம் அச்சடிப்பதற்கு உபயோகமாகி வந்த வரையில், அறிவு வளர்ச்சிக்குச் சாதனமாகவே இருந்து வந்தது. ஆனால், பத்திரிகை என்பது ஏற்பட்டபோது அச்சியந்திரம் மகா சக்தி வாய்ந்த பூதமாகப் பரிணமித்து விட்டது.

கதைகளில் மந்திர சக்தியினால் சிருஷ்டிக்கப்படும் பூதங்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறோம். அந்த பூதங்களைக் கொண்டு நல்ல காரியங்களையும் செய்விக்கலாம்; தீய காரியங்களையும் செய்விக்கலாம். ஜனங்களுக்கு நன்மையும் செய்யலாம்; கெடுதலும் செய்யலாம். இதே மாதிரிதான் அச்சியந்திர பூதமும். அந்த பூதமானது யாருடைய கையில் சிக்கிக்கொள்கிறதோ, அவர்களுடைய குறிநோக்கத்துக்குத் தகுந்தாற்போல் நல்லதோ, கெடுதலோ செய்யும் பயங்கர சக்தி அச்சியந்திரத்துக்கு உண்டு. பத்திரிகையின் மூலமாக அந்த சக்தியை அச்சியந்திரம் பிரயோகிக்கிறது.

ஆரம்பத்தில் ஒவ்வொரு நாட்டிலும் பத்திரிகைகள் தோன்றும் போது, பொது ஜனங்களுடைய நன்மைக்குச் சாதனமாகவே தோன்றுகின்றன. பொது ஜனங்களின் உரிமையை வற்புறுத்தி, அதிகார வர்க்கங்களுடன் போராடுகின்றன. இதனால், பத்திரிகைகள் பொது ஜனங்களிடையில் செல்வாக்கைப் பெறுகின்றன. இந்த செல்வாக்கையும் சக்தியையும் பணக்கார முதலாளிகள் பார்க்கிறார்கள். அச்சியந்திர பூதத்தைத் தங்களுக்கு அடிமைப்படுத்திக் கொள்ள ஆசைப்படுகிறார்கள். எவ்வளவுதான் பத்திரிகை சக்தியுள்ளதாயினும் அதையும் அடிமைப்படுத்தும் சக்தி பணத்துக்கு இருக்கிறது. கொஞ்சங் கொஞ்சமாகப் பத்திரிகைகள் பணக்காரர்கள் கையில் போய்ச் சேர்கின்றன. பிறகு, அச்சியந்திரமும் பத்திரிகையும் சில பணக்காரர்களின் சுயநல நோக்கங்களை நிறைவேற்றும் சாதனங்களாகி விடுகின்றன. இந் நிலைமையில், பத்திரிகையில் எழுதுவதற்கும் பத்திரிகை நடத்துவோரின் வாழ்க்கைக்கும் எவ்வித சம்பந்தமும் இராது.

ஒரு பிரபல பத்திரிகாசிரியர் பல வருஷங்களுக்கு முன்னால் சென்னையில் நடந்த ஒரு பொதுக் கூட்டத்தில் அக்கிராசனம் வகித்தார். அப்போது காங்கிரஸ் திட்டத்தில் மதுவிலக்கு இயக்கம் ரொம்பப் பிரபலமாயிருந்தது. அக்கிராசனர் காங்கிரஸை ஆதரித்துத் தீவிரமாகப் பத்திரிகையில் எழுதி வந்தார். இந்தக் கூட்டத்தில் அவர் பேசும்போது ஒருவர் நடுவில் குறுக்கிட்டு, "எல்லாம் சரிதான்; உங்கள் வீட்டுத் தென்னை மரங்களைக் கள்ளுக் குத்தகைக்கு விடுகிறீர்களே? ஏன்?" என்று கேட்டார். "அது என் சொந்த விஷயம்; அதைப் பற்றி இங்கே நான் பேசத் தயாராயில்லை" என்றார் பத்திரிகாசிரியர்.

இவ்விதமாகப் பத்திரிகைகளில் எழுதுவதற்கும், எழுதுகிறவர்களின் வாழ்க்கைக்கும் சம்பந்தமில்லாமலிருப்பது வெகு சகஜம். பத்திரிகையில் கதரை ஆதரித்துப் பிரமாதமாக எழுதுவார்கள்; தாங்களோ அசல் சீமைத் துணியில் ஸூட்டு அணிந்து கொள்வார்கள். காங்கிரஸ் மகா சபையை ஆதரித்துப் பத்தி பத்தியாய் எழுதுவார்கள்; ஒருவருக்கும் தெரியாமல் யுத்த நிதிக்குப் பணம் கொடுப்பார்கள். அதிகாரிகளின் காரியங்களைக் கடுமையாய்க் கண்டிப்பார்கள்; அன்றிரவு நடக்கும் டின்னர் பார்ட்டியில் அதே அதிகாரிகளுடன் கை குலுக்குவார்கள். சிறையிலுள்ள தேசத் தலைவர்களின் கஷ்டங்களைப் பற்றி மனம் உருக எழுதுவார்கள்; எழுதிய மை பேனாவில் காய்வதற்குள், கிண்டி குதிரைப் பந்தயத்துக்குப் பிரயாணமாவார்கள்.

இந்த மாதிரி முரண்பாடுகள் எவ்வளவோ இருந்தாலும், பத்திரிகையில் அச்சாகும் எழுத்தின் சக்தி என்னவோ அபாரந்தான். ஒரு மாபெருந் தலைவர் தம் வாழ்நாளையெல்லாம் தேசத் தொண்டுக்கு அர்ப்பணம் செய்திருப்பார்; எவ்வளவோ தியாகங்கள் செய்

திருப்பார்; ஏழு தடவை சிறைவாசம் செய்திருப்பார். தேசத்துக்காகத் துரும்பு எடுத்துப் போட்டறியாத பத்திரிகைக்காரர் மேற்படி தேசத் தலைவரைக் கன்னாபின்னா வென்று தாக்குவார். மேற்படி தேசத் தலைவருடைய பேச்சுக்கு உள்ள சக்தியைக் காட்டிலும் பத்திரிகையில் வரும் எழுத்துக்குத்தான் சக்தியும் செல்வாக்கும் அதிகமாயிருக்கும்.

இப்படிப்பட்ட சக்தியை ஒவ்வொரு நாட்டிலும் சர்க்கார் தங்களுக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக் கொள்ள முயல்வதும் சகஜமேயல்லவா? அந்த நோக்கத்துடனேதான் பத்திரிகைகளை ஆரம்பிக்கவும், நடத்தவும் சர்க்கார் அநுமதிக்கிறார்கள். தங்களுடைய காரியங்களையெல்லாம் பொது ஜனங்களுக்குத் தெரியப்படுத்துவதற்குப் பத்திரிகைகளைப் பிரயோஜனப்படுத்திக்கொள்கிறார்கள். சில சமயம் பத்திரிகைகள் தீவிரமாகச் சர்க்காரைத் தாக்கி எழுதவும் இடங் கொடுக்கிறார்கள். ஜனங்களுடைய அதிருப்தி இவ்விதம் பொங்கி வழிவதற்கு இடங் கொடுப்பதால் தங்களுக்கு நன்மைதான் என்றும், கோபமும் ஆத்திரமும் உள்ளே அடங்குவதில்தான் அபாயம் அதிகமென்றும் அவர்களுக்கு நன்றாய்த் தெரியும்.

ஆனால், யுத்தமோ அல்லது தேசத்தில் தீவிரமான சுதந்திரப் போராட்டமோ ஏற்படும்போது மேற்கூறிய சந்தோஷமான நிலைமை மாறி விடுகிறது. சர்க்காருக்கும் பத்திரிகைகளுக்கும் போராட்டம் மூளுகிறது.

இந்த யுத்தம் ஆரம்பமானபோது, பத்திரிகைகளுக்கும் சர்க்காருக்கும் பெரிய தகராறு ஏற்படும் போலிருந்தது. இந்தியாவிலுள்ள பத்திரிகைக்காரர்கள் மகாநாடு கூடி ஒற்றுமைப்பட முயன்றார்கள். முயற்சி ஓரளவு வெற்றியடைந்தது.

கொஞ்ச காலத்துக்கு எல்லாம் ஸௌமுகமாக நடந்து வந்தது. ஒவ்வொரு மாகாணத்திலும் பத்திரிகை ஆலோசனை சபைகள் ஏற்பட்டன. இந்த ஆலோசனை சபைகளில் இருந்த பெரிய பத்திரிகைக்காரர்கள் சின்னப் பத்திரிகைக்காரர்களை அடக்கி ஆண்டு வரும் தொண்டைச் செய்துவந்தார்கள். சர்க்கார் கொடுக்க வேண்டிய எச்சரிக்கைகளை இவர்களே கொடுத்தார்கள். இவ்விதம் ''பத்திரிகைச் சுதந்திரம்'' காப்பாற்றப்பட்டு வந்தது!

மகாத்மா காந்தி முதலியவர்கள் சிறைப்பட்டபோது மறுபடி நிலைமையில் நெருக்கடி ஏற்பட்டது. அப்போது தேசத்தில் நடந்த அமர்க்களத்தைப் பற்றிய செய்திகளை வெளியிடுவதில் சர்க்கார் கடுமையான கட்டுப்பாடுகளை ஏற்படுத்தினார்கள். இதைக் கண்டிப்பதற்காகச் சில தீவிரப் பத்திரிகைகள் நின்று விட்டன. நிதானப் பத்திரிகைகள் எப்போதும் போல் நடந்து வந்தன. பத்திரிகைகள் இவ்விதம் பிளவுபட்டதில் சர்க்காருக்குக் கொண்டாட்டம்.

பத்திரிகை நிறுத்தியதில் பயனில்லையென்று கண்ட பத்திரிகாசிரியர்கள் மறுபடியும் பத்திரிகையைத் தொடங்கினார்கள். சர்க்கார் கட்டுப்பாட்டுத் தொல்லைகள் குறைந்தபாடாயில்லை. முன்னே பிளவுபட்டுக் காரியம் செய்ததுபோல் செய்யாமல், எல்லாப் பத்திரிகைகளும் ஒன்றுபட்டுக் காரியம் செய்ய வேண்டுமென்று தீர்மானித்தார்கள். அகில இந்தியப் பத்திரிகாசிரியர் மகாநாடு கூடிச் சில திட்டங்கள் வகுக்கப்பட்டன. அவற்றில் முக்கியமானவை:—

(1) சர்க்கார் கட்டுப்பாட்டைக் கண்டிப்பதற்கு அறிகுறியாக ஒருநாள் எல்லாப் பத்திரிகைகளும் வேலை நிறுத்தம் செய்ய வேண்டும்.

(2) சர்க்கார் அறிக்கைகள், பட்டமளிப்பு ஜாபிதாக்கள், பெரிய அதிகாரிகளின் பிரசங்கங்கள் முதலியவற்றைப் பத்திரிகைகள் வெளியிடக் கூடாது.

இவற்றுள் முதல் தீர்மானத்தை அனுசரித்து ஜனவரி மீ 6வ இந்தியாவிலுள்ள பெரும்பாலான பத்திரிகைகள் வெளிவரவில்லை. ஆங்கிலோ—இந்தியப் பத்திரிகைகளைத் தவிர்த்த மற்ற தினசரிப் பத்திரிகைகள் பெரும்பாலும் வேலை நிறுத்தம் செய்தன.

இந்தியப் பத்திரிகை உலகத்தில் முதன் முதலாக இவ்விதம் ஏகோபித்த காரியம் ஒற்றுமையாக நடைபெற்றது மிகவும் பாராட்டத் தக்கதாகும்.

ஆனால், இந்த ஒருநாள் வேலை நிறுத்தத்தைக் குறித்து சர்க்கார் எவ்விதத்திலும் கவலைப் பட்டிருக்க மாட்டார்கள். இதனால் அவர்களுக்கு எவ்வித லாபநஷ்டமுமில்லை. ஆனால், இரண்டாவது தீர்மானம் இருக்கிறதே, அது சர்க்காரை ரொம்பவும் பாதிக்கக் கூடியது. எந்த நோக்கத்துடனே ''பத்திரிகைகள் நடக்கட்டும், சில சமயம் சர்க்காரைத் தாக்கி எழுதி

னாலும் பாதகமில்லை'' என்று விட்டிருக்கிறார்களோ, அந்த நோக்கத்துக்கே நேர்விரோதமானதாகும்.

எனவே, இரண்டாவது தீர்மானத்தை இந்தியப் பத்திரிகைகள் நிறைவேற்றி வைத்தது சர்க்காருக்குக் கோபமளித்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை. அந்தக் கோபத்தைச் சென்னை சர்க்கார் வெளிப்படையாகக் காட்டிக் கொண்டிருக்கிறார்கள். கவர்ன்மெண்ட் காரியாலயங்களில் சென்னைப் பத்திரிகைகளுக்கு அளித்திருந்த வசதிகளை ரத்து செய்துவிட்டார்கள்!

''நாய்! ஜாக்கிரதை!'' என்று போர்டு போட்டுப் பத்திரிகை நிருபர்களைக் ''கிட்ட வராதே'' என்று எச்சரித்து விட்டார்கள்!

இதற்காக நாம் கவலைப்பட வேண்டியதில்லை. ஏனெனில் பத்திரிகைக்காரர்களின் இரண்டாவது தீர்மானத்தை நிறைவேற்றுவதற்குச் சென்னை சர்க்கார் உத்தரவு இன்னும் அநுகுணமானதே தவிர வேறில்லை. அடுத்த பத்திரிகாசிரியர்கள் மகாநாட்டில் இதற்காக சென்னை சர்க்காருக்கு வந்தனத் தீர்மானம் நிறைவேற்றுவது மிகவும் பொருத்தமாயிருக்கும்.

இந்தக் காகிதக் கிராக்கி காலத்தில் உபயோகமற்ற செய்திகள் எவ்வளவுக்குக் குறைகின்றனவோ அவ்வளவுக்கு நல்லதுதான் அல்லவா? அடுத்தபடியாக, சர்க்காரால் ஸென்ஸார் செய்யப்பட்டு வரும் செய்திகளையே பிரசுரிப்பதில்லையென்று பத்திரிகைக்காரர்கள் முடிவு செய்தால் ரொம்ப நன்றாயிருக்கும். அப்போது பத்திரிகைகளில் பெரும்பாலும் உண்மையான செய்திகளைக் காணலாம்.

பத்திரிகைகளுக்கும் சர்க்காருக்கும் யுத்தம் என்னமோ தொடங்கிவிட்டது. இந்தியாவின் சரித்திரத்தில் இந்தியப் பத்திரிகைகள் ஏகோபித்துச் சர்க்காருடன் யுத்தம் செய்ய ஆரம்பித்திருப்பது இதுதான் முதல் தடவையாகும். பத்திரிகைகள் ஏகோபித்து நின்றால்—கடைசி வரையில் ஒற்றுமையாயிருந்தால்—ஜயம் பத்திரிகைகளுக்குத்தான் என்பதில் சந்தேகமில்லை. ஆம்; அச்சியந்திரத்தின் அபார சக்தி பிரிட்டிஷ் சர்க்காரைக் கூட அசைத்து விடக் கூடியதுதான். அதைச் சரியானபடி மட்டும் உபயோகப்படுத்த வேண்டும்.

---



# ஆடல் பாடல்



"கர்நாடகம்"

## தாய்மொழிப் பகைமை

தாயையும், தாய்நாட்டையும், தாய் மொழியையும் போற்றுவது மனித இயற்கை. தமிழர்கள் தங்கள் தாய்மொழியைப் போற்றிய விதம் அபூர்வமானது. பரமசிவனே தமிழ் மொழியை அளித்ததாகச் சொல்லி, தாய் மொழிக்கு தெய்வத் தன்மையையே அளித்தார்கள். அகஸ்தியரைப் பற்றிக் கூறும்போது,

"தழற்புரை சுடர்க் கடவுள்
தந்த தமிழ் தந்தான்"

என்றார் கம்பர்.

இப்படியெல்லாம் தாய்மொழியைப் போற்றிய தமிழகத்தில் இக்காலத்தில் பிறந்துள்ள சில அபூர்வப் பிறவிகள் தாய்மொழியைத் துவேஷிக்கிறார்கள். அவர்களுடைய துவேஷம் பலவிதமாக உருக் கொள்கிறது. "தமிழ் மொழி சங்கீதத்துக்கு உகந்ததல்ல" என்று ஒரு ஆச்சிரர் வந்து சொல்லும்போது, இந்த ஜன்மங்கள், சந்தோஷப்பட்டு ஆரவாரிக்கின்றன! "தமிழில் நல்ல பாட்டு இல்லை" என்று கூசாமல் சொல்கின்றன. "தமிழ்ப் பாட்டுப் பாடினால் கர்நாடக சங்கீதத்தின் தரம் குறைந்துவிடும்" என்று கை கூசாமல் எழுதுகின்றன.

இதற்கெல்லாம் எவ்வளவோ பேர், எவ்வளவோ தெளிவாக, எத்தனையோ தடவை பதில் சொல்லியாகி விட்டது. ஆனால் ஜன்மாந்தர பாவத்தினால் ஏற்பட்ட தாய் பாஷைத் துவேஷமானது அடியோடு அறிவை மூடி விடுவதால், குரான் தலைகளைப் போல் மேற்படி வாதங்களைத் திருப்பித் திருப்பிச் சொல்லி வருகிறார்கள்.

இந்த அபத்தப் பிதற்றல்களுக்கெல்லாம் இந்த வருஷத்து சங்கீத வித்வத் சபை அக்கிராசனர், மழவராயநேந்தல் சுப்பராம பாகவதர் அதிகார பூர்வமாகப் பதில் சொல்லியிருக்கிறார்:

"நம் தமிழ்நாட்டின் தாய்மொழியாகிய அமிழ்தினுமினிய தமிழ்மொழியில் ஆயிரக்கணக்கான பண்களும், கீர்த்தனங்களும், பதங்களும் தேனொழுகப் பாடியுள்ளார்கள்.........தமிழ்ப் பெரியாரின் கீர்த்தனங்களையும் சங்கீத வித்வான்கள் கையாளவேண்டும் என்பது என் அபிப்பிராயம்" என்று கூறியிருக்கிறார்.

சரி; தமிழிசை இயக்கத்தின் நோக்கமென்ன? மேற்படி "ஆயிரக் கணக்கான பண்கள், கீர்த்தனங்கள், பதங்கள்" இவற்றையெல்லாம் வெளிக் கொணர்ந்து சங்கீத வித்வான்கள் அதிகமாகக் கையாளச் செய்ய வேண்டுமென்பதுதான்.

மழவராயநேந்தல் பாகவதர் சொல்கிறபடி தெலுங்கிலும் நல்ல ஸாஹித்யங்கள் இருக்கின்றன, தமிழிலும் இருக்கின்றன என்று வைத்துக்கொண்டு பார்ப்போம். தெலுங்கில் உள்ள நல்ல ஸாஹித்யங்களை ஏற்கெனவே எல்லா வித்வான்களும் நிறையக் கையாள்கிறார்கள்; யதேஷ்டமாகப் பாடுகிறார்கள். தமிழ் ஸாஹித்யங்களைத்தான் பாடுவதில்லை. ஸ்ரீ சுப்பராம பாகவதர் பல அபூர்வ தமிழ்ப் பாட்டுக்களைப் பாடிக் காட்டினாராம். அந்தப் பாட்டுக்களைக் கச்சேரி வித்வான்கள் கச்சேரிகளில் கையாளுகிறார்களா? இல்லை. ஆகவே, தமிழ் ஸாஹித்யங்களைக் கையாளச் செய்வதற்குத்தான் விசேஷ முயற்சி தேவை யென்பதைத் தாய் பாஷைத் துவேஷிகள் தவிர வேறு யாராவது மறுக்க முடியுமா?

தமிழிசை முயற்சியினால் சங்கீதத்தின் தரம் குறைந்து போய்விடுமென்று சில துவேஷ ஜன்மங்கள் சொல்கின்றன. சங்கீதத்தின் தரம் எப்படிக் குறையும்? "சங்கீதம் எப்படியிருந்தாலும் பாதகமில்லை; தமிழ்ப் பாட்டுப் பாடினால் போதும்" என்று தமிழிசைக்காரர்கள் சொல்கிறார்களா? அப்படிச் சொல்வதாயிருந்தால், சங்கீத வித்வான்களிடமும் சங்கீத சபைகளிடமும் வரவேண்டிய அவசியமே இல்லையே? வித்வத் சபைகளில் வித்வான்கள் பாடவேண்டும், அதுவும் பல்லவிக்கு முன்னால் கீர்த்தனங்களாகப் பாட வேண்டும் என்று கேட்பதெல்லாம் எதற்காக? சங்கீதத்தின் தரம் கொஞ்சமும் குறையாமல் தமிழிசையை வளர்க்க வேண்டும் என்ற நோக்கத்தினாலேயே அல்லவா?

தாய்ப் பாஷையில் பாடுவதினால் சங்கீதத்தின் தரம் ஒருநாளும் குறையாது. தெரியாத அன்னிய பாஷைகளிலேயே பாடி வந்ததினால்

தான் சங்கீதத்தின் தரம் குறைந்து போயிருக்கிறது. இதனால்தான் சாஹித்யக் கொலைகள் நடக்கின்றன. பாட்டில் பாவம் என்னும் அம்சமே இல்லாமல் போயிருக்கிறது.

தாய்பாஷைக் கீர்த்தனங்களை அதிகமாகக் கையாளக் கையாள மேற்படி குறைகள் எல்லாம் நீங்கிக் கர்நாடக சங்கீதம் இன்னும் மேலான நிலைமையைத்தான் அடையும்.

## அகாடமி நிர்ப்பந்தம்

சென்னையில் 'மியூஸிக் அகாடமி' என்று இங்கிலீஷ் படித்தவர்களால் அழைக்கப்படும் சங்கீத வித்வத் சபை சென்ற பதினாறு வருஷ காலமாக நடந்து வருகிறது.

இந்த சபையின் நிர்வாகிகள் பெரும்பாலும் தமிழர்கள்தான்; தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள்தான். ஆனால், எப்படியோ இந்த சபையில் தாய்பாஷைத் துவேஷம் குடிகொண்டு விட்டது மிகவும் துரதிர்ஷ்டமான ஒரு சம்பவமாகும்.

சாதாரணமாய் சங்கீத வித்வத் சபையானது தமிழிசை சம்பந்தமாக எந்த முறையை அனுஷ்டித்திருக்க வேண்டும்? ஏற்கெனவே தெலுங்கு சாஹித்யங்கள் மிக்க பிரபலமடைந்திருப்பதை உத்தேசித்தும், தமிழ் மக்கள் இது விஷயத்தில் காட்டும் உணர்ச்சியை முன்னிட்டும் தமிழ் ஸாஹித்யங்களுக்கு முன்னைக் காட்டிலும் அதிக பிரபல்யம் கொடுத்திருக்க வேண்டும். இது நியாயம், செய்ய வேண்டியது, இயற்கை.

ஆனால், அகாடமிக்காரர்கள் செய்து வருவது என்ன? 'பந்தத் துவேஷம்' என்பார்களே, அம்மாதிரி தாய்மொழியில் துவேஷங் கொண்டவர்களைப் போல் காரியங்களைச் செய்து வருகிறார்கள். தமிழ் ஸாஹித்யங்களை வளர்ப்பதற்கு முயற்சி செய்வதற்குப் பதிலாக, அவற்றை விலக்குவதற்குக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். மிகப் பெரும்பாலான கச்சேரி புரோகிராம்களில் ஒரே ஒரு தமிழ்ப் பாட்டுத்தான் சேர்த்திருக்கிறார்கள். தமிழையும் தமிழ் இசையையும் அவமதிப்பதற்காகவே இவ்விதம் ஒரு பாட்டைச் சேர்த்திருப்பதாகத் தோன்றுகிறது. இது விஷயத்தில் சங்கீத வித்வான்களைக் குறை சொல்வதற்கில்லை. ஏனெனில் இந்த வித்வான்களே வேறு சபைகளில் அதிகமாகத் தமிழ்க் கீர்த்தனங்களைப் பாடுகிறார்கள். அகாடமியில் மட்டும் இவ்விதம் தமிழை விலக்குவதற்குக் காரணம் நிர்ப்பந்தமாய்த்தானிருக்க வேண்டுமல்லவா?

அகாடமி நிர்வாகிகள் தமிழுக்கு விரோதமாய் இத்தகைய நிர்ப்பந்தத்தைக் கையாண்டிருக்கிறார்கள் என்பதற்கு நிச்சயமான அத்தாட்சிகள் சில இருக்கின்றன.

இந்த வருஷம் மதுரை மணி ஐயர் புரோகிராமில் ஆறு தெலுங்கு சம்ஸ்கிருதப் பாட்டுக்களும் நாலு தமிழ்ப் பாட்டுக்களும் போட்டு அனுப்பியிருந்தார். மதுரை மணி ஐயரைக் காட்டிலும் வித்வத்தில் கரை கண்ட மகான்கள் யாரோ அகாடமி நிர்வாகிகளில் இருக்க வேண்டும்! அவர்கள், அவர் போட்டனுப்பிய நாலு தமிழ்ப் பாட்டுக்களில் மூன்றை விலக்கி விட்டார்கள். எனவே, புரோகிராமில் ஏழு பாட்டுக்கள்தான் அச்சாகியிருந்தன. மணி ஐயர் பாடும்போது, "மகா மகா அகாடமிக்காரர்களே? உங்களுக்குத் தமிழ் என்றால் அவ்வளவு வெறுப்பா? போகட்டும், இன்னொரு தெலுங்குக் கீர்த்தனத்தையே கேளுங்கள்" என்று சேர்த்துக் கொண்டு பாடினார்!

ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி தமது புரோகிராமில் நாலு தமிழ்க் கீர்த்தனங்களும், மற்றக் கீர்த்தனங்கள் நாலும் போட்டு அனுப்பினார். தமிழல்லாத கீர்த்தனம் இன்னொன்றாவது புரோகிராமில் சேர்த்துவிட வேண்டுமென்று அகாடமி நிர்வாகிகள் ரொம்ப ரொம்ப வற்புறுத்தினார்கள். (ஒரு தெலுங்குப் பாட்டு அதிகமானால் கர்நாடக சங்கீதம் காப்பாற்றப்படும் என்று எண்ணினார்களோ, தெரியவில்லை!) தங்கள் இஷ்டப்படி பாட வைக்கத் தங்களுக்கு சட்ட பூர்வமான உரிமை இருப்பதாகக் கூடப் பயமுறுத்தினார்கள். இதற்கெல்லாம் எம். எஸ். அசையவில்லை. எட்டு கீர்த்தனங்களில் நாலு தமிழாய்த்தான் பாடினார். அவருடைய கச்சேரிக்குத்தான் எல்லா நாட்களையும் விட அதிகம் பேர் வந்திருந்தார்கள்.

இந்த இரண்டு உதாரணங்களினாலும் அகாடமிக்காரர்கள் தமிழ்ப் பாட்டைத் "தமிழ்" என்ற காரணத்துக்காகவே வெறுத்து ஒதுக்குகிறார்கள் என்று ஸ்பஷ்டமாய் ஏற்படுகிறது.

ஆனால் அகாடமியார் இத்தகைய பாஷைத் துவேஷக் கொள்கையை அனுசரிப்பதினால் ஒன்றும் மோசம் முழுகிப் போய் விடாதென்பது நிச்சயம். பூனை கண்ணை மூடிக் கொண்டால் உலகம் அஸ்தமித்து விடாது. கிழவி தன் சேவலை எடுத்துக் கொண்டு போய்விட்டால் ஊரில் பொழுது விடியாமல் இருந்து விடாது. தமிழ் மக்களின் ஏகோபித்த விருப்பம் என்னும் மகத்தான பலம் தமிழ் இசை இயக்கத்துக்கு இருக்கிறது. தாய்பாஷைத் துவேஷங் கொண்ட சிலர்

எவ்வளவுதான் முயன்றாலும் தமிழிசையின் வளர்ச்சியைத் தடுத்துவிட முடியாது. தமிழிசையினால் கர்நாடக சங்கீதத்தின் பெருமையும் குன்றி விடாது. உயர்ந்த சங்கீதமும், உயர்ந்த சங்கீதத்தை அநுபவிக்கும் ரஸிகத் தன்மையும் தமிழிசை இயக்கத்தினால் தமிழ் மக்களிடையில் மேலும் மேலும் பரவும். இதனால் கர்நாடக சங்கீதமும் மேன்மையடையும்.

## கோகலே ஹால் கச்சேரிகள்

மெல்லிய பூவின் இதழ்களைத் தொட்டுக் கசக்கினால், உடனே அதன் அழகு குன்றி விடுகிறது. கலையும் அப்படித்தான். சட்ட திட்டங்கள், நிர்ப்பந்தங்கள், அதிகார அமுல்கள் இவற்றினால் எல்லாம் கலையின் மேன்மை குறைந்துதான்போகும். சுயேச்சையுள்ள இடத்தில் கலையும் உற்சாகமாக வளரும். கோகலே ஹாலில் பைன் ஆர்ட்ஸ் ஸொஸைடியின் ஆதரவில் நடந்த கச்சேரிகள் இத்தகைய சுயேச்சைத் தன்மை பெற்று நன்றாகச் சோபித்தன. சில வித்வான்கள் அகாடமியிலும் கச்சேரி செய்தார்கள்; கோகலே ஹாலிலும் கச்சேரி செய்தார்கள். இரண்டு கச்சேரிகளையும் கேட்டவர்கள் ஒவ்வொரு தடவையும் கோகலே ஹால் கச்சேரிதான் விசேஷம் என்று அபிப்பிராயம் தந்தார்கள்.

28உ கோகலே ஹாலில் ஸ்ரீ ஜி. என். பாலசுப்பிரமணியம் கச்சேரி செய்தார். ரொம்ப பேஷான கச்சேரி. ஜி. என். பி. கச்சேரிகளின் விஷயத்தில் ஒரு கஷ்டம் என்னவென்றால், வாய்த்துக்கொண்டால் பிரமாதமாக வாய்த்துக் கொள்கிறது. வாய்க்காவிட்டால் அடியோடு படுத்துக் கொள்கிறது. அவருடைய ஒரு ரேடியோக் கச்சேரியைக் கேட்டு விட்டு, "ஆஹா! ஜி. என். பி. கச்சேரி கேட்காத காது என்னத்துக்கு?" என்று நம் சிநேகிதர்களிடம் சொல்வோம். அவர்கள் அவருடைய அடுத்த ரேடியோக் கச்சேரியைக் கேட்டு விட்டு நம்மிடம் பலமான சண்டைக்கு வந்து விடுவார்கள்.

கோகலே ஹாலில் 28உ அவருடைய கச்சேரி நன்றாய் வாய்த்துக்கொண்டது. சாரீரம் வாய்த்துக் கொண்டதோடு பக்க வாத்தியங்களும் ஜமாவாய்ச் சேர்ந்தன. பாலக்காட்டு மணி மிருதங்கம், பாப்பா வெங்கட்ராமய்யர் பிடில். சபையில் நல்ல ரஸிகர்கள். கேட்பானேன்? மோகனம், இந்தோள ராக ஆலாபனங்கள் வெகு அருமையாயிருந்தன. ஹரிகாம்போதி கிருதியும், காம்போதியில் "மா ஜானகி" என்னும் கீர்த்தனமும் நன்றாய்ச் சோபித்தன. தீக்ஷிதரின் "ராமச்சந்திரம்" என்னும் வஸந்தா ராகக் கீர்த்தனத்தை அவ்வளவு துரிதமாக யாரும் பாடியிருக்க மாட்டார்கள்.

29உ ஸ்ரீமதி சாந்தாவின் பரத நாட்டியம். வெளி மாகாணத்திலிருந்து ஒரு பெண்மணி தமிழ்நாட்டுக்கு வந்து, பரதநாட்டியக் கலையைப் பயின்றார் என்பதற்காகவே அவரைப் பாராட்டுதல் தகும். அந்தக் கலையை அவர் நன்றாகப் பயின்று, லய சுத்தமாக ஆடுகிறார் என்பது ரொம்பவும் பாராட்ட வேண்டிய விஷயம். ஸ்ரீமதி சாந்தாவின் நாட்டியத்தில் ஜீவ சக்தி ததும்புகிறது. ஒவ்வொரு அசைவிலும் ஒரு மிடுக்கையும், முடுக்கையும் காணலாம். பந்தநல்லூர் பாணிக்கு இது ஒரு தனிச் சிறப்பாகும். நாட்டியம் ஆடுகிறவராவது, சபையோராவது தூங்கி வழிவதற்கு இடமிராது. நாட்டியத் தோற்றங்கள் எல்லாம் தமிழ்நாட்டின் பழைய அபூர்வ சிற்பங்களை நினைவூட்டுவனவாயிருக்கும். இந்தத் தன்மையெல்லாம் சாந்தாவின் நாட்டியத்தில் பொருந்தியிருக்கிறது. அபிநயத்திற்கு இன்னும் எவ்வளவோ இடம் இருக்கத்தான் செய்கிறது. நாட்டியக் கலையில் தேர்ந்தவர்களிடம் நாம் காணும் லாகவம் ஸ்ரீமதி சாந்தாவிடம் இன்னும் ஏற்படவில்லை. அபிநயத்தில் இயற்கைத்தன்மை இல்லை. இதெல்லாம் நாளடைவில் ஏற்பட வேண்டும்.

30உ ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாளின் கச்சேரி நடந்தது. கச்சிதமாக இருந்தது. ஆரவாரம், ஆர்ப்பாட்டமும் இல்லை; அடம்பரமும் இல்லை. கச்சேரி தமிழ் மயம். சபையோர் எல்லோரும் கச்சேரி முடியும்வரையில் இருந்து ஆனந்தமாக ரஸித்தார்கள். ஸாஹித்யத்தின் சுவையை அநுபவித்தார்கள். இத்தனை நாளைக்குப் பிறகும் "வள்ளி கணவன்" பாட்டைக் கேட்டு உள்ளம் உருகினார்கள்.

பக்க வாத்தியங்களும் அமரிக்கையாயமைந்தன. பிடில் சந்தானமையா; மிருதங்கம் கல்பாத்தி ராமநாதன்.

31உ அரியக்குடி ராமானுஜ ஐயங்காரின் கச்சேரி கிட்டத்தட்ட "மகத்தான கச்சேரி" என்று சொல்லக் கூடியதாயிருந்தது. கோகலே ஹால் என்றாலே ஐயங்காருக்குக் குஷி என்று தோன்றுகிறது. "எந்தரோ மஹானுபாவுலு" என்ற பஞ்சரத்தின கீர்த்தனம் பாடியதும் கச்சேரி மேளம் கட்டிஜம் என்று ஆகிவிட்டது. பந்துவராளி ராகத்திலும் ஸ்வரத்திலும் சபையோரைக் கொண்டே போய் விட்டார்! புரோகிராமைப்

பெரும்பாலும் மாற்றித்தான் பாடினார். அகாடமியின் சட்டதிட்டங்களுக்குக் கட்டுப் பட்டுப் பாடிய பிறகு கோகலே ஹாலின் சுயேச்சையை நன்றாய் அநுபவித்தார் என்று தோன்றியது. வரையறைக்குட்படாமல் இவ்இடம் போல் வித்வான் பாடியபடியால், சபை யோரும் வரையறைக் குட்படாத சங்கீதானந் தத்தை அநுபவித்தார்கள்.

பெரிய பக்க வாத்தியங்கள் அமைவதில் பாடகர்களுக்கு ரொம்ப சௌகரியம் இருக் கிறது; ஒரு அசௌகரியமும் இருக்கத்தான் செய்கிறது. கச்சேரி முடிந்ததும், "இன் றைக்குப் பாலக்காட்டு மணி கச்சேரி" "இன் றைக்குச் சௌடய்யா கச்சேரி" என்று ரஸிகர்கள் சொல்லிக்கொண்டு போவதற்கு இடமேற்படுகிறது. இன்று அய்யங்கார் அந் தகைய பேச்சுக்கள் கிளம்புவதற்கு இடங் கொடுக்கவில்லை. சுயம் 'ஐயங்கார் கச்சேரி' யாகவே நடத்தினார். சில சமயம் சௌடய்யா வும், மணியும் ஜீமூதமாய் ஸ்வரம் வாசித்துக் கொண்டு வரும்போது, (ஆமாம்; மணியும் மிருதங்கத்தில் ஸ்வரந்தானே வாசிக்கிறார்!) சபையோர் பிரமாத ஆரவாரம் செய்யப் போகிறார்கள் என்று எதிர்பார்க்கும்படி யிருக்கும். அவர்கள் முடிக்கும் சமயத்தில் ஐயங்காரும் சேர்ந்துகொண்டு அந்த ஆரவாரத் தில் தாமும் பங்கு சம்பாதித்துக் கொண்டு விடுவார்! கச்சேரி நன்றாய் ஆரம்பமாகி விட்டபடியால், இம்மாதிரி வேடிக்கைகளை யெல்லாம் சபையோரும் குதூகலமாக அநு பவித்தார்கள்.

## கேட்டுப் பாருங்கள்!

11௳. திருச்சியில் ஸ்ரீமதி கே. பி. சுந்தராம் பாளின் பெரிய கச்சேரி.

12௳. திருச்சியில் இளம் பாடகர் ஸ்ரீ டி. வி. நமசிவாயம் காலை 8-30க்கும் மாலை 6 மணிக் கும் எல்லாம் தமிழ்ப் பாட்டாகப் பாடுகிறார்.

13௳. அவ்விதமே ஸ்ரீ கே. வி. ஆராவமுதனும் இரு முறை தமிழ் மயமாய்ப் பாடுகிறார்.

14௳. திருச்சியில் ஸ்ரீ டி. கே. ரங்காச்சாரியின் முழு நேரக் கச்சேரி.

16௳. சென்னையில் முசிரியின் பாட்டு; பாப்பா வயலின்; கல்பாத்தி மிருதங்கம்; வில்வாத்ரி கடம்.

17௳. சென்னையில் பலவன்குடி சாமாவைய்யா ரும், வி. ஏ. செல்லப்பாவும் பாடுகிறார்கள். ஸ்ரீ பார்த்தசாரதி தம்பதிகள் வீணை, வயலின், வாய்ப்பாட்டு கேட்கத் தகுந்தவை. திருச்சியில் மாரியப்ப ஸ்வாமிகளின் பக்தி ததும்பும் பாட்டுக் கச்சேரி.

18௳. சென்னையில் லேடீலா நாகமணியின் பாட்டு செவிக்கு இனிமையா யிருக்கும்.

19௳. சென்னையில் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ண சாமி ஐயங்காரின் பாட்டு; நல்ல தாளக் கட் டுடன் இருக்கும்.

18௳. திருச்சியில் மைசூர் சௌடய்யா தனி வயலின்; சென்னையில் அஞ்சல்.

19௳. சென்னையில் பாப்பா வெங்கட்ராமய்யர் தனி வயலின்; திருச்சியில் அஞ்சல்.

# பார்த்திபன் கனவு

"கல்கி"

## முப்பத்திரண்டாம் அத்தியாயம்

## உறையூர் சிறைச்சாலை

விக்கிரமன் உறையூர் சிறைச்சாலையில் ஒரு தனி அறையில் அடைக்கப் பட்டிருந்தான். சிங்காதனம் ஏறிச் செங்கோல் செலுத்த வேண்டிய ஊரில் சிறையில் அடைக்கப் பட்டுக் கிடப்பதை நினைத்து நினைத்து அவன் துயரச் சிரிப்புச் சிரித்தான். இளம் வயதில் அவனுடைய தந்தை அரசு செலுத்திய காலத்து ஞாபகங்கள் அவனுக்கு அடிக்கடி வந்தன. பார்த்திப மகாராஜா போர்க்கோலம் பூண்டு கிளம்பிய காட்சி அவன் மனக்கண் முன்னால் பிரத்யட்சமாக நின்றது. அதற்கு முதல் நாள் மகாராஜா இரகசிய சித்திர மண்டபத்துக்குத் தன்னை அழைத்துச் சென்று அவருடைய கையால் எழுதிய கனவுச் சித்திரங்களைக் காட்டியதெல்லாம் ஒவ்வொன்றாக நினைவுக்கு வந்தன. ஐயோ! அவையெல்லாம் கனவாகவே போகவேண்டியதுதான் போலும்! தந்தைக்குத் தான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றலாமென்னும் ஆசை அவனுக்கு இதுவரையில் இருந்தது. இப்போது அடியோடு போய்விட்டது. பல்லவ சக்ரவர்த்தியின் கட்டளையை எதிர்பார்த்து இந்தச் சிறைச்சாலையில் எத்தனை நாள் கிடக்க வேண்டுமோ தெரியவில்லை. அவரிடமிருந்து என்ன கட்டளை வரும்? மரண தண்டனையை நிறைவேற்றும்படிதான் அநேகமாகக் கட்டளை வரும். மாரப்பன் அந்தக் கட்டளையை நிறைவேற்றச் சித்தமாயிருப்பான். தன்னுடைய கதியைப் பற்றி யாருக்கும் தெரியக்கூடப் போவதில்லை. பார்த்திப மகாராஜாவின் பெயராவது ஜனங்களுக்கு வெகு காலம் ஞாபகம் இருக்கும். தன் பெயரைக்கூட எல்லாரும் மறந்து விடுவார்கள்!

செண்பகத் தீவிலிருந்து தான் திரும்பி வந்ததேன் என்னும் கேள்வியை விக்கிரமன் அடிக்கடி கேட்டுக் கொண்டான். சின்னஞ் சிறு தீவாயிருந்தாலும் அங்கே சுதந்திர ராஜாவாக ராஜ்ய பாரம் செய்தது எவ்வளவு சந்தோஷமாயிருந்தது! அதை விட்டு, இப்படித் தன்னந்தனியே இங்கே வரும் பைத்தியம் தனக்கு எதற்காக வந்தது?

அந்தப் பைத்தியத்தின் காரணங்களைப் பற்றியும், அவை எவ்வளவு தூரம் நிறைவேறின என்பது பற்றியும் விக்கிரமன் யோசித்தான். செண்பகத் தீவிலிருந்தபோது பொன்னி நதியையும் சோழவள நாட்டையும் எப்போது பார்க்கப் போகிறோம் என்ற ஏக்கம் மீண்டும் மீண்டும் அவனுக்கு ஏற்பட்டது. ஆனால், சோழநாட்டின் மேல் அவனுக்கு எவ்வளவு ஆசை இருந்தாலும் ஒரு பக்கத்தில் வெறுப்பும் இருந்தது. சோழநாட்டுமக்கள் சுதந்திரத்தை மறந்து, வீரமிழந்து பல்லவ சக்கரவர்த்திக்கு உட்பட்டிருப்பதை நினைக்க நினைக்க அவனுடைய வெறுப்பு மிகுந்தது. அத்தகைய ஜனங்களுக்கு அரசனாயிருப்பதை விடச் சின்னஞ் சிறு செண்பகத் தீவின் மக்களுக்கு அரசனாயிருப்பதே மேல் என்றும் அவன் நினைத்ததுண்டு. அந்த எண்ணம் இப்போது சிறையில் இருந்த சமயம் பதின்மடங்கு அதிகமாயிற்று. வீர பார்த்திப மகாராஜாவின் புதல்வன் உள்ளூர் சிறைச்சாலையில் இருப்பதைக்கூடத் தெரிந்து கொள்ளாமல்தானே இந்த ஜனங்கள் இருக்கிறார்கள்?

தாயாரைப் பார்க்க வேண்டுமென்ற ஆசை ஒன்றிருந்தது. அதுவும் நிறைவேறவில்லை. நிறைவேறாமலே சாகப் போகிறோமோ, என்னமோ?

அப்புறம், குந்தவி!—அவளை நினைக்காமலிருப்பதற்கு விக்கிரமன் ஆன மட்டும் முயன்றான். ஆனால், முடியவில்லை. குந்தவியை நினைத்ததும், விக்கிரமனுக்குப் பளிச்சென்று ஓர் உண்மை புலனாயிற்று. செண்பகத் தீவிலிருந்து கிளம்பி வந்ததற்குப் பல காரணங்கள் அவன் கற்பித்துக் கொண்டிருந்தானென்றாலும்,

உண்மையான காரணம்—அவனுடைய மனதின் அந்தரங்கத்தில் கிடந்த காரணம்—இப்போது தெரிய வந்தது. குந்தவிதான் அந்தக் காரணம். இரும்பு மிகவும் வலிமையானதுதான்; ஆனாலும், காந்தத்தின் முன்னால் அதன் சக்தி யெல்லாம் குன்றி விடுகிறது. காந்தம் இழுக்க இரும்பு ஓடி வருகிறது. குந்தவியின் சந்திரவதனம்—சீ, இல்லை!—அவளுடைய உண்மைக் காதல்தான்—தன்னுடைய இரும்பு நெஞ்சத்தை இளக்கி விட்டது. அந்தக் காந்த சக்திதான் தன்னைச் செண்பகத் தீவிலிருந்து இங்கே இழுத்துக்கொண்டு வந்தது. இதற்காக அவள் பேரில் அவனுக்குக் கோபம் வந்ததா?—ஆமாம்; சுரமாகக் கிடந்த தன்னை எடுத்துக் காப்பாற்றியவள் அவள் என்று தெரிந்தபிறகுகூட அவனுக்குக் குந்தவியின்மேல் கோபம் இருந்தது. தன்னுடைய சுதந்திரப் பிரதிக்ஞையை நிறைவேற்றுவதற்கு அவள் குறுக்கே நிற்பாள் என்ற எண்ணந்தான் காரணம். ஆனால், கடைசி நாள் அவளுடைய பேச்சிலிருந்து அது தவறு என்று தெரிந்தது. "இவரை மன்னிக்கும்படி நான் என் தந்தையிடம் கேட்கமாட்டேன்; ஆனால் மரண தண்டனையை நிறைவேற்றுவதற்கு முன்னால் இவரை மணம் புரிந்து கொள்ள அநுமதி கேட்பேன்" என்று எவ்வளவு கம்பீரமாய்க் கூறினாள்? இத்தகைய் பெண்ணின் காதலை அறிவதற்காகச் செண்பகத் தீவிலிருந்துதானா வரலாம்? சொர்க்கலோகத்திலிருந்துகூட வரலாமல்லவா? ஆகா! இந்தத் துரோகியான மாரப்பன் வந்து குறுக்கிட்டிராவிட்டால், குந்தவியும் தானும் வருகிற அமாவாசையன்று கப்பலேறிச் செண்பகத் தீவுக்குக் கிளம்பியிருக்கலாமே!

அமாவாசை நெருங்க, நெருங்க, விக்கிரமனுடைய உள்ளக் கிளர்ச்சி அதிகமாயிற்று. அமாவாசையன்று செண்பகத் தீவின் கப்பல் மாமல்லபுரம் துறைமுகத்துக்கு வரும். அப்புறம் இரண்டு நாள் தன்னை எதிர் பார்த்துக் கொண்டிருக்கும். எப்படியாவது தப்பித்துக் கொண்டு அமாவாசையன்று மாமல்லபுரம் போகக் கூடுமானால்?......

இவ்விதம், விக்கிரமன் எண்ணாததெல்லாம் எண்ணினான். ஒவ்வொரு நிமிஷமும் அவனுக்கு ஒரு யுகமாயிருந்தது. கடைசியில் அமாவாசைக்கு முதல் நாள் மாலை மாரப்ப பூபதி வந்தான். விக்கிரமனைப் பார்த்து நகைத்துக் கொண்டே, "ஓ! இரத்தின வியாபாரியாரே! காஞ்சியிலிருந்து கட்டளை வந்துவிட்டது" என்றான்.

ஒருகணம் விக்கிரமன் நடுங்கிப் போனான். கட்டளை என்றதும், மரண தண்டனை என்று அவன் எண்ணினான். மரணத்துக்கு அவன் பயந்தவனல்லவானாலும், கொலையாளிகளின் கத்திக்கு இரையாவதை அவன் அருவருத்தான்.

ஆனால், மாரப்பன், "காஞ்சிக்கு உன்னைப் பத்திரமாய் அனுப்பி வைக்கும்படி கட்டளை. இன்றிரவு இரண்டாம் ஜாமத்தில் கிளம்ப வேண்டும். சித்தமாயிரு" என்றதும், விக்கிரமனுக்கு உற்சாகம் பிறந்தது. வழியில் தப்புவதற்கு எத்தனையோ சந்தர்ப்பங்கள் நேரிடலாமல்லவா? அல்லது போராடி வீர மரணமாவது அடையலாமல்லவா? இது இரண்டும் சாத்தியமில்லாவிட்டால், சக்கரவர்த்தியின் முன்னிலையில் இன்னொரு தடவை "அடிமை வாழ்வை ஒப்புக்கொள்ளமாட்டேன்; சுதந்திரத்துக்காக உயிரை விடுவேன்" என்று சொல்வதற்காவது ஒரு சந்தர்ப்பம் ஏற்படலாமல்லவா? ஆகா! குந்தவியும் பக்கத்தில் இருக்கும்போது இம்மாதிரி மறுமொழி சொல்வதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தால் அதைவிடப் பெரிய பாக்கியம் வேறு என்ன இருக்க முடியும்?

## முப்பத்துமூன்றும் அத்தியாயம்

## அமாவாசை முன்னிரவு

அன்றிரவு ஒரு ஜாமம் ஆனதும் சிறைச்சாலைக் கதவு திறந்தது. மாரப்பனும் ஆயுதந் தரித்த வீரர் சிலரும் வந்தார்கள். விக்கிரமனுடைய கைகளைச் சங்கிலிகளால் பிணைத்து வெளியே அழைத்துச் சென்றார்கள்.

வாசலில் கட்டை வண்டி ஒன்று ஆயத்தமாய் நின்றது. அதில் விக்கிரமன் ஏறிக் கொண்டான். அவனுக்கு முன்னும் பின்னும் வண்டியில் சில வீரர்கள் ஏறிக் கொண்டார்கள். அவ்விதமே வண்டிக்கு முன்னாலும் பின்னாலும் சிலர் நின்றார்கள்.

சிறை வாசலில் மாரப்பன் அந்த வீரர்களின் தலைவனாகத் தோன்றிய வனைக் கூப்பிட்டு, அவன் காதோடு ஏதோ இரகசியமாகச் சொன்னான். பிறகு, உரத்த குரலில் "கிளம்பலாம்" என்றான்.

உடனே, வண்டிக்காரன் வண்டியை ஓட்ட, முன்னாலும் பின்னாலும் நின்றவர்களும் போகத் தொடங்கினார்கள்.

உறையூர் வீதிகளின் வழியாக வண்டி போய்க் கொண்டிருந்தது. முன்னெல்லாம்போல் இப்போது இரவில் விளக்குகள் எரியாமல் நகரம் இருளடைந்து கிடப்பதைப் பார்த்ததும், விக்கிரமனுக்கு என்னவோ மாதிரி செய்தது! ஆகா! சோழநாட்டுத் தலைநகரமான உறையூர்தானா இது?

"ஏனுங்க, சாமியார்களே! இந்தப் பிள்ளையாண்டான் யாரு? இவனை எங்கே 'அழைத்துப் போறீங்க?" என்ற பேச்சைக் கேட்ட விக்கிரமன் திடுக்கிட்டான். பேசியவன் வண்டிக்காரன்தான். ஆனால், அந்தக் குரல்... பொன்னன் குரலாக வல்லவா இருக்கிறது? அப்படியும் இருக்க முடியுமா?

வீரர்களில் ஒருவன், "உனக்கு என்ன அப்பா, இந்த வம்பு? பேசாமல் வண்டியை ஓட்டு!" என்றான். அதற்கு வண்டிக்காரன், "எனக்கு ஒன்றுமில்லை, அப்பா! ஆனால் ஊரெல்லாம் பேசிக்கிண்டிருக்காங்க. யாரோ செண்பகத் தீவிலிருந்து வந்த ஒற்றனாம்; இரத்தின வியாபாரி மாதிரி வேஷம் போட்டுண்டு வந்தானாம். சக்கரவர்த்தி மகள் குந்தவி தேவியையே ஏமாற்றி விட்டானாம். அப்பேர்ப்பட்டவனை நம்ம சேனாதிபதி கண்டு பிடித்து விட்டாராம். அப்படியெல்லாம் ஊரிலே பேச்சாயிருக்கே, அவன்தானா இவன் என்று கேட்டேன்" என்றான்.

"ஆமாம்; அவன்தான் என்று வைத்துக் கொள்ளேன்" என்றான் ஒரு வீரன்.

"எங்கே அழைத்துக் கொண்டு போறீங்களோ?" என்று வண்டிக்காரன் கேட்க, "எங்கே அழைத்துக் கொண்டு போவாங்க? காஞ்சிபுரத்துக்குத்தான்" என்று மறுமொழி வந்தது.

"அடே அப்பா! அவ்வளவு தூரமா போகவேண்டும்? நீங்கள் ஏழெட்டுப் பேர் காவலுக்குப் போறீங்களே, போதுமா? வழியிலே இவனுக்கு யாராவது ஒத்தாசை செய்து தப்பிச்சு விட்டாங்கன்னா என்ன செய்வீங்க?" என்றான் வண்டிக்காரன்.

பேசுகிறவன் உண்மையில் பொன்னன்தானோ? தனக்குத்தான் சமிக்ஞையாகச் செய்தி தெரிவிக்கிறானோ? வழியில் வந்து ஒத்தாசை செய்வதாகக் கூறுகிறானோ?—இவ்விதம் விக்கிரமன் வியப்புடன் எண்ணமிட்டுக் கொண்டிருக்கும்போது, சற்றுப் பின்னால் வந்த வீரர் தலைவன் "யார் அங்கே? என்ன பேச்சு?" என்று அதட்டவே, மௌனம் குடிகொண்டது. பிறகு, வண்டிக்காரனாவது வீரர்களாவது பேசவேயில்லை.

காவேரிக் கரைக்கு வந்ததும் வண்டி நின்றது. விக்கிரமனும் வண்டியிலிருந்த வீரர்களும் இறங்கினார்கள். ஆற்றங்கரையோரமாக ஒரு படகு ஆயத்தமாயிருந்தது. அங்கே ஒருவன் கையில் தீவர்த்தியுடன் நின்று கொண்டிருந்தான்.

எல்லாரும் இறங்கியதும் வண்டிக்காரன் வண்டியைத் திருப்பிக் கொண்டே "போயிட்டு வரீங்களா? ஒற்றனை ஜாக்கிரதையாய்க் கொண்டு போய்ச் சக்கரவர்த்தியிடம் சேர்ப்பியுங்கள்; வழியிலே ஒரு காட்டாறு இருக்கிறது; பத்திரம்!" என்றான். அப்போது தீவர்த்தி வெளிச்சம் அவன் முகத்தின் மேல் அடித்தது. விக்கிரமனுக்கு அந்த முகத்தைப் பார்த்ததும் பெரும் ஏமாற்ற முண்டாயிற்று. ஏனெனில், அவன் பொன்னன் இல்லை. ஆனால், அவனுடைய கண்களில் அந்த ஒளி—எங்கேயோ பார்த்த முகமாயிருக்கிறதே?—சட்டென்று உண்மை புலனாயிற்று. பொன்னன்தான் அவன்! முகத்தில் பொய் மீசை வைத்துக் கட்டிக் கொண்டிருக்கிறான். அவன் கூறிய வார்த்தைகளின் பொருள் என்ன? வழியில், காட்டாற்றின் சமீபத்தில் தன்னை வந்து விடுவிக்க

வருவதாகத்தான் சொல்லி யிருக்க வேண்டும். இந்த எண்ணத்தினால் விக்கிரமனுக்கு மிகுந்த உற்சாகம் உண்டாயிற்று.

படகில் ஏறி ஆற்றைக் கடந்தபின் அவர்கள் நடுஜாமம் வரையில் கால் நடையாகப் பிரயாணம் செய்தார்கள். பிறகு சாலையோரம் இருந்த ஒரு மண்டபத்தில் படுத்துத் தூங்கினார்கள்.

மீண்டும் அதிகாலையில் எழுந்து மாட்டு வண்டி பிடித்துக்கொண்டு பிரயாணமானார்கள். அன்று பொழுது சாயும் சமயத்தில் பராந்தக புரத்தைத் தாண்டினார்கள்.

இனிக் கொஞ்ச தூரத்தில் காட்டாறு வந்து விடும் என்று விக்கிரமன் ஒருவாறு தெரிந்து கொண்டிருந்தான். அந்த வண்டிக்காரன் பொன்னனாயிருக்கும்பட்சத்தில், அவன் தனக்குச் செய்தி சொன்னதும் உண்மையாயிருக்கும்பட்சத்தில், இங்கேதான் தனக்கு உதவி வர வேண்டும். "யார் வருவார்கள்? எப்போது வருவார்கள்?" என்றெல்லாம் எண்ணி விக்கிரமனுடைய உள்ளம் பரபரப்பை அடைந்தது.

அஸ்தமித்து இரண்டு நாழிகை இருக்கும். அந்த அமாவாசை இருட்டில் சாலையில் ஜனநடமாட்டம் அதிகமாயிருந்ததைக் கண்டு விக்கிரமன் வியந்தான். ஆங்காங்கு சிறு சிறு கும்பலாக ஜனங்கள் போய்க் கொண்டிருந்தார்கள். கோவிலுக்குப் போகிறவர்களைப் போல் அவர்கள் காணப்பட்டார்கள். வெறி பிடித்தவர்களைப் போல் ஆடிக்கொண்டும் பாடிக் கொண்டும் போனார்கள். சிலர் மஞ்சள் வஸ்திரமும் அணிந்து கொண்டிருந்தார்கள். ஒவ்வொரு கும்பலிலும் ஒருவன் தீவர்த்தி பிடித்துக் கொண்டிருந்தான். இன்னும் இந்தக் கும்பல்களில் சிலர் நீண்ட கத்திகளை எடுத்துச் சென்றது விக்கிரமனுக்கு ஒருவாறு பயங்கரத்தை யளித்தது. இவர்களெல்லாம் எங்கே போகிறார்கள்? கையில் கத்திகள் என்னத்திற்குக் கொண்டு போகிறார்கள்?

இந்தக் காட்சிகளைப் பார்த்த மாரப்பனுடைய வீரர்கள் தங்களுக்குள் இரகசியமாகப் பேசிக் கொண்டதில் சில வார்த்தைகள் விக்கிரமனுடைய காதிலும் விழுந்தன. "பத்திரகாளி" "நரபலி" "கபாலபைரவர்" என்னும் சொற்கள் அவனுக்குத் திகைப்பையும் பயத்தையும் உண்டாக்கின. மகேந்திர மண்டபத்தின் வாசலில் மகா காலபைரவரும் மாரப்பனும் பேசிக் கொண்டது அவனுக்கு நினைவு வந்தது. ஓஹோ! இன்றைக்கு அமாவாசை இரவல்லவா? மாரப்பன் ஒருவேளை தன்னைக் காஞ்சிக்கு அனுப்புவதாகச் சொல்லி உண்மையில் காபாலபைரவரின் பலிக்குத்தான் அனுப்பியிருப்பானோ?—இவ்விதம் அவன் எண்ணிக் கொண்டிருக்கும்போதே "ஓம்காளி! ஜயகாளி" என்ற பல குரல்களின் ஏகோபித்த கோஷம் அவன் காதில் விழுந்து, மயிர்க்கூச்சலை உண்டாக்கிறது. அவ்விதம் கோஷித்தவர்கள் அடுத்த நிமிஷம் விக்கிரமன் இருந்த வண்டியைச் சூழ்ந்து கொண்டார்கள். அவர்கள் கையில் நீண்ட கூரிய கத்திகள் நட்சத்திர வெளிச்சத்தில் மின்னியது தெரிந்தது. "ஓம் காளி ஜயகாளி" என்ற கோஷங்களுக்கு மத்தியில் "எங்கே பலி?" என்று ஒரு பயங்கரமான குரல் கேட்டது.

இதற்குள் வண்டிக்கு முன்னாலும் பின்னாலும் வந்த வீரர்கள் ஒரே ஓட்டமாய் ஓடி விட்டார்கள். வண்டியில் இருந்தவர்களும் தொப்புத் தொப்பென்று குதித்து ஓட்டம் பிடித்தார்கள். வண்டிக்காரன் அந்தர்த்தானமாகி விட்டான். விக்கிரமன் கைகள் சங்கிலிகளால் வண்டியின் சட்டத்துடன் பிணைக்கப் பட்டிருந்தபடியால், அவனால் மட்டும் வண்டியிலிருந்து குதிக்க முடியவில்லை. பீதியடைந்திருந்த போதிலும், இன்னது செய்வதென்று தெரியாமல் திகைப்புண்டிருந்தான். அப்போது வண்டியின் பின்புறத்தில் ஒரு குரல் "மகாராஜா! பதற வேண்டாம்! நான்தான் பொன்னன்!" என்று கேட்டது. அடுத்த நிமிஷம் பொன்னன் வண்டியில் ஏறிச் சங்கிலிகளை அவிழ்த்தெறிந்தான். விக்கிரமன் வண்டியிலிருந்து குதித்ததும், இரண்டு உயர் ஜாதிக் குதிரைகள் சித்தமாய் நிற்பதைக் கண்டான். "மகாராஜா! ஏறுங்கள் குதிரை மேல்! ஒரு கணமும் தாமதிப்பதற்கில்லை" என்றான் பொன்னன்.

# என் மனைவி!

(ஒரு வேடிக்கை வழக்கு)

"துமிலன்"

**மி**ஸ் சாந்தகுமாரிக்கு நாளது தை மாதத்தில் ஒரு சுபயோக சுப தினத்தில் விவாகம் செய்வதென்று அவர்களுடைய பெரியோர்கள் எல்லாருஞ் சேர்ந்து நிச்சயித்திருந்தார்கள். ஆனால் அந்தக் கல்யாணம் சட்ட விரோதமானதென்றும் அது நடப்பதைத் தடை செய்து ஓர் உத்தரவு பிறப்பிக்க வேண்டுமென்றும் மிஸ்டர் ராஜாமணி கோர்ட்டில் வழக்குத் தொடுத்தார்.

அன்று கோர்ட்டில் எள்ளுப் போட்டால் கொள்ளு விழாது, அவ்வளவு கூட்டம்! எங்கு பார்த்தாலும் ஸினிமா நடிகர்களும், நடிகைகளும், பட முதலாளிகளுமாகவே காணப்பட்டனர்.

ஸர் வாயாடி எழுந்திருந்து "நான் இந்த வழக்கில் மனுதார் ராஜாமணியின் சார்பாக ஆஜராகிறேன். எதிர் மனுதார் தமது பெண் சாந்தகுமாரிக்கு அடுத்த மாதம் பத்தாந் தேதி விவாகம் நடத்த நிச்சயித்திருக்கிறார். அவர் அப்படிச் செய்யாமலிருக்கத் தடை உத்தரவு பிறப்பிக்க வேண்டும்" என்று ஆரம்பித்தார்.

**நீதிபதி** :—இதென்ன அநியாயமாயிருக்கிறது? பெண்களுக்கு வரன் கிடைப்பது குதிரைக் கொம்பாகவும், நெருப்புப் பெட்டியாகவும் இருக்கும்போது விவாகங்களைத் தடை வேறு செய்யவேண்டுமா? எத்தனையோ பொய் சொல்லி ஒரு கல்யாணம் செய்ய வேண்டுமென்று சொல்வார்களே, அது எத்தனை? முந்நூற்று நாற்பதா, இரண்டாயிரத்து எட்டா?

**ஸர் குல்லாசாமி** (எதிர் மனுதாரின் வக்கீல்) :—கோர்ட்டாருக்குச் சட்டம் மட்டுமின்றி உலக விஷயங்களும் 'அத்துபடி' ஆகியிருக்கிறது. ஒரு கல்யாணம் பண்ணி வைக்கச் சரியாக ஓர் ஆயிரம் பொய் சொல்லலாம்!

**ஸர் வாயாடி** :—நல்லது. ஆனால் இப்போது அப்படிப் பொய் சொல்லியாவது சாந்தகுமாரிக்குக் கல்யாணம் செய்ய வேண்டிய அவசியமே இல்லை. ஏனென்றால் அவளுக்கு ஏற்கெனவே விவாகமாகிவிட்டது!

**நீதிபதி** :—ஆகிவிட்டதா? யாரைக் கல்யாணஞ் செய்துகொண்டாள்?

**ஸர் வாயாடி** :—எனது கக்ஷிக்காரர் மிஸ்டர் ராஜாமணியை. ஆகையினால்தான் அவர் சாந்தகுமாரியை "என் மனைவி" என்று பாத்தியம் கொண்டாடி, அவளுக்கு இரண்டாம் முறை விவாகஞ் செய்வதைத் தடை செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்கிறார்.

**நீதிபதி** :—அவர்களுக்கு எப்போது விவாகமாயிற்று?

**ஸர் வாயாடி** :—இரண்டு மாதங்களுக்கு முன்தான். எப்படி விவாகம் நடந்தது என்பதைச் சொல்கிறேன்: சாந்தகுமாரி ஒரு ஸினிமா நக்ஷத்திரம்.

**நீதிபதி** :—ஸினிமா நக்ஷத்திரமா? ஏதோ இன்று வழக்கு ருசிகரமாக இருக்கும் போலிருக்கிறது. எல்லாவற்றையும் விவரமாகச் சொல்லும்.

**ஸர் வாயாடி** :—சாந்தகுமாரி முதலில் வெறும் சாந்தாவாகத்தான் இருந்தாள். ஒரு நாள் அவளும் அவள் தகப்பனாரும் ஸினிமாப் படம் பிடிப்பதை வேடிக்கை பார்ப்பதற்காக ஒரு ஸ்டுடியோவுக்குப் போயிருந்தார்கள். அங்கே அன்று படம் பிடிக்க எல்லா ஏற்பாடுகளும் தயாராயிருந்தும் நடிக்க வேண்டிய பெண் பிரேமகுமாரி எதிர்பாராதபடி வர முடியாமற் போய் விட்டது. சாந்தாவைப் பார்த்ததும் டைரக்டர், "இவள் நமது பிரேமாவைப் போலவே இருக்கிறாளே! இவள் தகப்பனார் சம்மதப்பட்டால் இவளை வைத்துக்கொண்டே படம் பிடித்துவிடலாமே!" என்றார். சாந்தாவின் தகப்பனார் அதற்கு ஆக்ஷேபிக்கவில்லை. சாந்தா நடிக்க வேண்டியதெல்லாம் இதுதான். "எனக்கு வாழைப்பழம் ரொம்பப் பிடிக்குமே!" என்று சொல்லி விட்டு ஒன்றன்பின் ஒன்றாகப் பதினைந்து மொந்தன் வாழைப்பழங்களைத் தின்னவேண்டியது. சாந்தா இந்தப் பாகத்தைக் கொஞ்சம் கூடக் குறை சொல்வதற்கு இடமில்லாமல் நடித்துக் காட்டினாள். கூடியிருந்தவர்கள் கரகோஷம் செய்தார்கள்.

**ஸர் குல்லாசாமி**:—இந்த விவரங்களைப் பிரஸ்தாபிப்பதை நான் ஆக்ஷேபிக்கிறேன். இவையெல்லாம் வழக்கிற்கு அநாவசியம்.

**நீதிபதி** :—மிஸ்டர் குல்லாசாமி! நடுவில் குறுக்கிடாதேயும். சென்ற வாரமெல்லாம் கொலை வழக்குகளையும், திருட்டு வழக்குகளையும் விசாரித்து மிகவும் அலுத்துப் போயிருக்கும் எனக்கு இந்த விஷயங்களைக் கேட்க உற்சாகமாயிருக்கிறது. அவை ஒரு வேளை பின்னால் நான் தீர்ப்புக் கூறுவதற்கு உபயோகப் பட்டாலும் படலாம்.

**ஸர் வாயாடி** :—சாந்தா உடனே சாந்த குமாரியாகி விட்டாள். பத்திரிகைகளெல்லாம் அவள் போட்டோவைப் பிரசுரித்து "ஸினிமா வானில் ஒரு புதிய நட்சத்திரம்" என்று பாராட்டின. பட முதலாளிகள் நான் நீ என்று போட்டிக் கொண்டு அவளுக்குக் கண்டிராக்ட் கொடுக்க முன் வந்தார்கள். ஒரு பட முதலாளி அவளுக்கு மாதம் இரண்டாயிரம் ரூபாய் வீதம் பத்து வருஷத்துக்குச் சம்பளம் கொடுத்து வருவதாகவும் அதைத் தவிர பத்து ஏக்கர் விஸ்தீரணமுள்ள ஒரு வாழைத் தோட்டத்தைச் சன்மானமாக அளிப்பதாகவும் கூறினார். ஆனால் பெண்ணின் தந்தைக்கு அவளை ஸினிமாவில்விட இஷ்டமில்லை. அவளை யாருக்காவது விவாகம் செய்து கொடுத்துவிட விரும்பினாராதலால் அவர் ஒரு 'கண்டிராக்டை'யும் ஒப்புக் கொள்ளவில்லை. ஆனால் பலபேருடைய தொந்தரவின்பேரில் ஒரே ஒரு படத்தில் மட்டும் பெண்ணை நடிக்கவிட ஒப்புக் கொண்டார். அதன்படி மிஸ் சாந்தகுமாரி "ஆயிரம் தலை பின்னிய அதிவேக காந்தாமணி" என்ற படத்தில் நடித்தாள்.

**நீதிபதி**:—அதென்ன படம்! ஆயிரம் தலை பின்னிய......

**ஸர் வாயாடி** :—அதிவேக காந்தாமணி!

**நீதிபதி**:—அதுமாதிரி யெல்லாம் படம் பிடிக்கிறார்களா?

**ஸர் வாயாடி**:—இப்பொழுதெல்லாம் அதான் பாஷன்! பொது ஜனங்களுக்கு அது மாதிரி படங்கள்தான் பிடிக்கிறதாம்.

**நீதிபதி**:—நான் ஒரு சனியனையும் பார்த்ததில்லை.

**ஸர் வாயாடி**:—அந்தப் படத்தில் மிஸ் சாந்தகுமாரி ஒரு பால்ய காந்தாமணியாக நடிக்கிறாள். அப்பொழுது அவளுக்கு நூறு தலைதான் பின்னத் தெரியும். அவளுடைய பின்னல் வேகத்தைக் கேள்விப்பட்ட ராஜ குமாரனை ராஜாமணி அவளைக் கல்யாணஞ் செய்து கொள்ள வருகிறான். சாந்த குமாரி மணப் பெண்ணாக வந்து மிஸ்டர் ராஜாமணிக்கு வாழ்க்கைப் படுகிறாள்.

**ஸர் குல்லாசாமி** :—வாழ்க்கைப்படவில்லை. வாழ்க்கைப் படுவதாக நடிக்கிறாள். அவ்வளவுதான்.

**நீதிபதி**:—அவசரப்படாதேயும். அவர் முழுக் கதையையும் சொல்லட்டுமே.

**ஸர் வாயாடி**:—அந்தக் காட்சியில் கல்யாணச் சடங்குகள் எல்லாம் ஒன்று பாக்கி யில்லாமல் நடந்தேறின. அதனால்தான் என் கக்ஷிக்காரர் சாந்த குமாரி தனக்கு அக்னி சாட்சியாய் வாழ்க்கைப் பட்டுவிட்டாளென்றும் அவளுக்கு மறுபடியும் விவாகஞ் செய்யக்கூடாதென்றும் தடை உத்தரவு பிறப்பிக்கும்படி கோர்ட்டாரைக் கேட்டுக் கொள்ளுகிறார்.

**நீதிபதி** :—ஆனால் சாந்தகுமாரி நடிகை என்ற ஹோதாவில்தானே அப்படிச் செய்தாள்?

**ஸர் வாயாடி** :—ஆமாம்! ஆனால் எல்லாம் தத்ரூபமாக இருக்க வேண்டுமென்பதற்காகப் படம் பிடிப்பவர்கள் ஓர் உண்மையான கல்யாணத்தைப் போலவே நடத்தினார்கள். கல்யாணத்திற்கு முதல்தரமான கொட்டகைப் பந்தல் போட்டு வாழை மரங்கள் கட்டப் பட்டிருந்தன. வைதிகர்கள் ஒன்று பாக்கி விடாமல் எல்லா மந்திரங்களையும் சொன்னார்கள். மணமகன் மணமகள் கழுத்தில் தாலியைக் கட்டினான். அப்பொழுது ஜாம் ஜாம் என்று மேளம் முழங்கிற்று. பெரியவர்கள் ஆசீர்வாதம் செய்தார்கள்.

**நீதிபதி** :—தாலி கூடக் கட்டுகிறார்களா?

**ஸர் வாயாடி** :—ஆமாம், பிரபுவே.

**நீதிபதி** :—அப்படியானால் தாலி கட்டியதால் அவள் மனைவியாய் விட்டாளென்பதுதானே உமது வாதம்?

**ஸர் வாயாடி** :—ஆமாம்!

**ஸர் குல்லாசாமி** :—ஒருவர் தாம் நடிக்கும்போது ஒரு பெண்ணுக்குத் தாலி கட்டினால் அவர்கள் தம்பதிகளாகி விட முடியுமா?

**ஸர் வாயாடி** :—ஏன் ஆகமுடியாது? அர்ஜுனன் அல்லி ராணிக்குத் திருட்டுத்தனமாகத் தாலி கட்டி விட்டுப் பிறகு அவள் தன் மனைவி என்று பாத்தியங் கொண்டாட வில்லையா?

**ஸர் குல்லாசாமி** :—அது வெறும் புராணக் கதை.

**ஸர் வாயாடி** :—கதையாயிருந்தாலும் ஒரு சமூகத்தில் பின்பற்றப்படும் சம்பிரதாயத்தைக் குறிப்பிடுகிற தலைவா? இருந்தாலும் என் நண்பர் சொல்வது போல் தாலி கட்டினால் மட்டும் ஒரு பெண் மனைவியாகி விடமாட்டாளென்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன்.

**ஸர் குல்லாசாமி** :—அப்படிச் சொல்லும்.

**நீதிபதி** :—பின்னே, இன்னும் என்ன என்ன செய்ய வேண்டும்? எனக்குக் கல்யாணமாகி முப்பது வருஷத்துக்கு மேலாகி விட்டதால் எல்லாம் மறந்து போய்விட்டது.

**ஸர் குல்லாசாமி**:—ஸப்தபதி நடந்தால்தான் விவாகம் பூர்த்தியானதாகும்.

**ஸர் வாயாடி** :—இந்த விவாகத்தில் இதெல்லாம் ஒன்றும் குறைவில்லாமல் நடந்தது.—படம் 'முதல் தர'மாக இருக்க வேண்டுமென்பதற்காக அத்தியயனஞ் செய்த அசல் வைதிகர்களையே நடிக வைதிகர்களாக ஏற்பாடு செய்திருந்தார்கள். சாதாரணமாகக் கல்யாணங்களில் வைதிகர்கள் அவசர அவசரமாக மந்திரங்களை அரை குறையாகச் சொல்வது வழக்கம். சந்தடியில் அந்த அரைகுறை மந்திரங்களும் யார் காதிலும் விழுவதில்லை. ஆனால் பிரஸ்தாப விவாகத்தில் 'மைகரா போனில்' சரியாக விழுவதற்காக வைதிகர்கள் மந்திரங்களை நிறுத்தி ஸ்பஷ்டமாக உச்சரித்தார்கள். "ஏகமிஷே; விஷ்ணு ஸ்துவான் வேது", "த்வே ஊர்ஜே," "திரீணி ஊர்ஜே"...என்று ஸப்தபதி மந்திரங்களைக் கணீர் கணீரென்று சொன்னார்கள். பெண் அம்மியை மிதித்து அருந்ததியைப் பார்த்தான். ஆகையால் இந்தக் கல்யாணம் நிஜமாகவே நடக்கும் விவாகங்களைவிட அதிக சாஸ்திரோக்தமாகவே நடந்தது. இப்படி எல்லா அம்சங்களும் குறைவின்றி நடந்தேறியிருக்கும்போது என் கக்ஷிக்காரர் சாந்தகுமாரி தமக்குச் சட்டப் பிரகாரமும் சாஸ்திரப்படியும் மனைவியென்று பாத்தியம் கொண்டாடுவது நியாயந்தானே.

**ஸர் குல்லாசாமி** :—வெள்ளைக்கார தேசப் படங்களிலும் கல்யாணங்கள் நடக்கின்றன. ஆனால் அங்கேயெல்லாம் இது மாதிரி ஸினிமாவில் நடித்த பெண்ணை மனைவியென்று கூற யாரும் முன் வந்ததில்லை. இதை நிரூபிக்க என் கக்ஷிக்காரர் சார்லி சாப்ளின், கிரெட்டா கார்போ, வில்லியம் பௌவல் முதலிய நாலாயிரம் ஸினிமா நடிகர்களை விசாரிக்க வேண்டுமென்று விரும்புகிறார்.

**ஸர் வாயாடி** :—மேல்நாட்டுப் படங்களில் விவாகம் நடத்துவதென்றால் இது மாதிரி சாஸ்திரோக்தமாகச் செய்வதில்லை. கல்யாணமென்றால் ஒரு மாதாகோவிலைக் காட்டுவார்கள். பிறகு அங்கிருந்து மணப்பிள்ளையும் பெண்ணும் மணக்கோலத்துடன் வரும் காட்சியைக் காண்பிப்பார்கள். அல்லது கல்யாண விருந்து நடப்பதைக் காண்பிப்பார்கள். அதிலிருந்து விவாகம் நடந்து விட்டதென்று நாம் ஊகித்துக் கொள்ளுகிறோம்.



அம்மியை மிதித்து அருந்ததியைப் பார்த்தான்.........

**ஸர் வாயாடி** :—பாதிரி வேஷம் போட்டவர் மணப் பெண்ணையும் பிள்ளையையும் பார்த்து கிறிஸ்துவ சாஸ்திர சம்பிரதாயக் கேள்விகளைக் கேட்கும் ஸினிமாவை நான் பார்த்திருக்கிறேன்.

**ஸர் வாயாடி**:—இருக்கலாம். ஆனால் கிறிஸ்துவர்

களுள் ஒரு விவாகம் மதப் பூர்வமாவதற்கு அது ஒரு மாத கோவிலில் நடந்ததாக வேண்டும். ஸினிமா விவாகங்கள் அங்கே கோவில்களில் நடப்பதில்லை. தவிர அங்கே நிஜமான பாதிரி வந்து கல்யாணஞ் செய்து வைக்கிறாரென்று சொல்ல முடியுமா?

ஆனால் ஹிந்து விவாகங்களில் மாங்கல்ய தாரணமும் ஸப்தபதியும் மிக முக்கிய அம்சங்கள். அவர்கள் கோவில்களிலோ, சத்திரங்களிலோ வீடுகளிலோ எங்கே வேண்டுமானாலும் கல்யாணத்தை நடத்தலாம். மந்திரங்கள் சொல்லி நடத்துவதுதான் முக்கியம்.

**நீதிபதி**:—இந்த விவாகம் சரியானதென்று நிரூபிக்க இன்னும் ஏதாவது ஆதாரங்கள் இருந்தால் சொல்லிவிடும்.

**ஸர் வாயாடி**:—வேண்டியது உண்டு. தம்பதிகள் இருவரும் ஊஞ்சல் ஆடினார்கள். விவாகத்தின்போது ஸ்திரீகள் லாலி பாடினார்கள்; ஹாரத்தி சுற்றினார்கள். ஹாரத்திக்காகப் போட்ட பணத்தைப் பங்கிட்டுக் கொள்வதைப் பற்றிச் சண்டை கூட ஏற்பட்டதென்றால் நிஜமான கல்யாணம் என்பதற்கு வேறு என்ன சாட்சி வேண்டும்?

**ஸர் குல்லாசாமி**:—நான் சில விஷயங்களைச் சமர்ப்பித்துக்கொள்ள விரும்புகிறேன். தாங்கள் என் நண்பரின் குயுக்தியான வாதத்தினால் ஏமாந்துவிட மாட்டீர்களென்று எனக்குத் தெரியும். தங்களுடைய சட்ட ஞானமென்ன? அனுபவமென்ன? தங்கள் அழகென்ன? தாங்கள்......

**நீதிபதி**:—மணி என்ன ஆகிறது? டிபனுக்கு நேரமாகவில்லையா?

**ஸர் குல்லாசாமி**:—மணி ஒன்றுதான் ஆகிறது.

**நீதிபதி**:—அப்படியானால் எனக்கு ஏன் வயிற்றைப் பசிக்கிறது?

இதற்குப் பதில் சொல்வதற்காக சில வக்கீல்கள் சட்ட புத்தகத்தைப் புரட்ட ஆரம்பித்தார்கள்.

**நீதிபதி**:—"சரிதான்; சீக்கிரம் சாப்பிட்டு விட்டேன். இப்போது ஒரு மணி நேரம் மணியைத் தள்ளி வைத்து விட்டார்களல்லவா? இதில் ஒன்றும் புரியவில்லை."

நீதிபதி இப்படி முணங்கிக்கொண்டேயிருந்தவர் திடீரென்று ஏதோ ஞானோதயம் தோன்றியவர்போல நாற்காலியில் ஒரு தரம் எழுந்திருந்து உட்கார்ந்து விட்டு "ஸர் வாயாடி! உமது கக்ஷிக்காருக்கு என்ன கிழமை கல்யாணம் நடந்தது? எத்தனை மணிக்கு என்று சொல்ல முடியுமா?" என்றார்.

**ஸர் வாயாடி** (கட்டுகளைப் புரட்டிப் பார்த்து விட்டு):—வெள்ளிக்கிழமை காலை பன்னிரண்டரை மணிக்கு.

**நீதிபதி** (புன்சிரிப்புடன்):—நல்லது. நான் இந்த வழக்கில் இப்போதே தீர்ப்புக் கூறி விடுகிறேன். தயவு செய்து எல்லோரும் இங்கே இன்று கூடியிருக்கும் நக்ஷத்திரங்களைப் பார்த்துக் கொண்டிருப்பதை விட்டு என்னையும் கொஞ்சம் கவனியுங்கள்.

நான் என் மாமனார் சிபார்சின் பேரில் முதல் முதல் ஜில்லா முன்சீப் ஆனதிலிருந்து இது மாதிரியான வழக்கை விசாரித்ததில்லை.

ஒரு பெரிய சமூகத்தார் மிகப் புனிதமாகக் கொண்டாடும் மத சம்பிரதாயங்களை இப்படிப் படங்களில் சந்தியிழுப்பதை நான் பலமாகக் கண்டிக்கிறேன். சில படங்களில் பஞ்சாட்சரம், அஷ்டாட்சரம் முதலிய மகா மந்திரங்களையும் நாக்கில் நரம்பின்றிச் சொல்கிறார்கள். 'தத்ரூபமாக' நடத்துவதற்கும் ஓர் எல்லை வேண்டும். மத உணர்ச்சியைப் பாதிக்கும் இத்தகைய காட்சிகளை, படங்களைத் தணிக்கை செய்யும் ஸென்ஸார்கள் எப்படி அநுமதிக்கிறார்களென்று தெரியவில்லை. முத்தம் கொடுக்கும் பாகங்களை மட்டும் ஒரு தரத்துக்குப் பத்து தரம் போட்டுப் பார்த்து விட்டுக் கத்தரித்து எடுப்பது தான் அவர்கள் கடமை என்று நினைக்கிறார்கள் போலிருக்கிறது.

ஸப்தபதி நடந்தால் விவாகம் சட்டபூர்வமானதாகவும் சாஸ்திர பூர்வமானதாகவும் ஆகிவிடுகிறது. ஹிந்து சமூகத்தில் இது சம்பந்தமாகப் பெரிய கிளர்ச்சி ஏற்பட வேண்டுமென்பதற்காக மனுதார் கோருவதுபோல் தடை உத்தரவு பிறப்பித்து விவாகத்தை ஊர்ஜிதப் படுத்த வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். ஆனால் விவாகம் முழுதும் சாஸ்திரோக்தமாக நடைபெறாததால் அப்படிச் செய்ய முடியாததற்கு வருந்துகிறேன். பிரஸ்தாப விவாகம் பழைய நீளமான மணிக் கணக்குப்படி வெள்ளிக்கிழமையன்று பதினொன்றரை மணிக்குக் கொழுத்த ராகு காலத்தில் நடந்திருப்பதால் சாஸ்திரப்படியும் சட்டப்படியும் செல்லத் தக்கதல்ல.

ஆகையால் வாதியின் மனுவைத் தள்ளி விட்டேன். அவரவர்களுடைய செலவை அவரவர்கள் பொறுத்துக் கொள்ள வேண்டியது.

# திண்ணை ரஸாயனம்

## சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார்

### நான்காவது நாள்

"நமஸ்காரம் பண்ணு, சாஸ்திரிகளுக்கு நமஸ்காரம் பண்ணு" என்றார் தீக்ஷிதர்.

அவருடைய பேத்தி, (மகள் வழியில்) வணங்கி நமஸ்காரம் செய்தாள்.

சே:—உள்ளே போ, குழந்தாய்! மாமி இன்னும் எல்லாரும் இருக்கிறார்கள்.

தீ:—இந்த வருஷத்தில் இவளுக்கு விவாகம் முடித்துவிட வேண்டும் என்றிருக்கிறோம். நீங்கள் ரொம்பப் படித்திருக்கிறீர்கள். மகா மேதாவி. உங்களைப் போன்றவர்கள் இந்த வரதக்ஷிணை சம்பிரதாயத்தைத் தொலைக்க ஏதாவது செய்தால் நன்றாயிருக்கும். மற்ற வேலைகளெல்லாம் இருக்கத்தான் இருக்கிறது. ஆனால் இது ரொம்ப முக்கியமானது. ஏதோ சுயராஜ்யம், காங்கிரஸ் என்று கத்துகிறார்கள். வரதக்ஷிணையை நிறுத்த முடியவில்லை.

சே:—நிறுத்துகிற காலம் வந்தால் நின்று போகும். என்ன சொல்லுகிறீர்கள்? ரசாயன வம்பு வளர்க்கலாமா, இல்லை, வேண்டாமா?

தீ:—சொல்லுங்கள். சொல்லுங்கள். நீங்கள் சொல்லுவதெல்லாம் ரொம்ப சாஸ்திரீகமாகத்தானிருக்கிறது. அனல வாயுவைப் பற்றிச் சொன்னீர்கள். ஏதோ 92 மூல தாதுக்கள் உலகத்திலுள்ளவை என்றீர்களே. அதில் வாயுக்கள் எத்தனை, திரவம் எத்தனை, உலோகங்கள் எத்தனை? நம்ம பெரியவர்கள் பஞ்ச பூதமாகத்தான் பிருதிவி, அப்பு, வாயு, தேஜஸ், ஆகாசம் என்று முடித்து விட்டார்கள்.

சே:—நம்ம ரிஷிகள் சகலமும் தெரிந்தவர்கள்தான். அவர்கள் இந்தக் காலத்திலிருந்திருந்தால் உலகத்தை ஆண்டிருப்பார்கள். நாம் அவர்களுக்குச் சந்ததிகளாகப் பிறந்து சோம்பேறிகளாக இருக்கிறோம்.

தீ:—ரொம்ப சரியாகச் சொன்னீர்கள்.

சே:—அவர்கள் வாயு என்று சொன்னது இந்த பூகோளத்தைச் சுற்றியிருக்கும் வளி மண்டலத்தைத்தான். இது ஒரு மிசிர வாயு. இதில் நான்கு பங்கு **வளிரம்**, ஒரு பங்கு அனலம்.

தீ:—வளிரம் என்று ஒன்று கொண்டு வந்து விட்டீர்களே! அனலம்தான் தெரிந்து போச்சு. அது தகன வாயு, அதுவே பிராண வாயு என்றீர்கள். இப்போது வளிரம் என்று சொல்லுகிறீர்களே, அது என்ன வஸ்து?

சே:—அனலத்தைப் போலவே வளிரம் என்பது ஒரு வாயு. அதாவது கண்ணுக்குத் தெரியாத காற்றுப் பொருள். ஜட குணம் அதிகம் பொருந்திய ஒரு வாயு. அதற்குப் புணர்ச்சி வேகம் குறைவு. மந்தமாக ஒன்றும் செய்யாமல் சும்மா இருக்கும். நல்லதுமில்லை, பொல்லாததுமில்லை. விறகையும் எரிக்காது, மண்ணெண்ணெயையும் எரிக்காது.

தீ:—இந்த மந்தப் பொருள்தான் காற்றில் முக்கால் பாகத்திற்கு மேல் என்கிறீர்கள்.

சே:—ஆமாம்; மருந்துடன் தேங்காய் எண்ணெய் கலப்பதுபோல் காற்றில் அது கலந்து நிற்கிறது. ஒரு பங்கு அனலமும் நாலு பங்கு வளிரமும் கலந்திருக்கிறது. நாம் சுவாசிக்கும் காற்றில் அப்படியிராவிட்டால் அனலம் உடனே எல்லாத்தையும் தகித்துப் போட்டிருக்கும். நம்முடைய மூச்சில் உள்ளே போகும் காற்றில் ஒரு பங்கு அனலத்திற்கு நான்கு பங்கு மந்த வளிரமாக இருப்பதினால்தான் நாம் பிழைத்திருக்கிறோம். புண்ணுக்கு மருந்து பூசுவதில் எண்ணெயில்லாமல் மருந்தாகவே பூசினால் வெந்துபோகும்; அந்த மாதிரி.

தீ:—வளிரம் அனலத்தின் வேகத்தைத் தணிக்கிறது. அவ்வளவுதானே? இதற்கு ஏன் மந்தம் என்று பெயர் வைக்கக் கூடாது?

சே:—இந்த வாயுவுக்கு ஆங்கிலத்தில் நைட்ரோஜன் என்று பெயரிட்டிருக்கிறார்கள். **வளியில்** பெரும்பாகம் **வளிரம்**. நீரிலுள்ளது நீரகம். அதைப்போல் வளியிலுள்ளது வளிரம். காற்றில் கலந்து கிடக்கும் வளிரம் புணர்ச்சி வேகமற்று மந்தமாயிருந்தாலும், யாக்கைப் பொருள்களில் வளிரம் மிகவும் முக்கியமான அம்சம். நம்முடைய தேகத்

திலுள்ள சதையில் வளிரம் முக்கிய அம்சம். பிராணிகளின் தசைப் பொருளானது வளிரம் புணர்ந்த பொருள்.

நீ :—அப்படியானால் நாம் சாப்பிடும் ஆகாரத்திலுங் கூட வளிரம் கலந்திருக்க வேண்டுமா?

சே :—ஆமாம், உணவுப் பொருள்களில் வளிரம் ரொம்பச் சேரும்.

நீ :—காற்றிலுள்ள வளிரம் உடலுக்கு மூச்சு வழியாக ஏறுதோ?

சே :—ஏறுது; ஏறுவதாக இருந்திருந்தால் சாப்பாட்டுத் தொந்தரவு ரொம்ப குறைந்திருக்கும். பட்டாணி, கடலை, மாமிசம், பால், கோதுமை, முதலிய பண்டங்களில் வளிரம் இருக்கிறது. உணவு வழியாகத்தான் உடலுக்கு வளிரம் சேரும். காற்றிலிருக்கும் வளிரத்தைப் பெறும் சக்தி நம்முடைய தேகத்திற்குக் கிடையாது.

நீ :—மிருகங்கள் பூச்சிகளுங்கூட அப்படியேதானே?

சே :—ஆமாம். தசைப் பொருளில் வளிரம் ஒரு முக்கியமான அம்சம். இன்னும் கேளுங்கள். வெடி மருந்தில் சேரும் வெடியுப்பு வளிரம் புணர்ந்த உப்பு. காற்றில் அனலமும் வளிரமும் வெறுங்கலவை. வெடியுப்பில் வளிரம் ரசாயனப் புணர்ச்சி பெற்று நிற்கிறது.

நீ :—அப்படியானால் அதை மந்தம் என்று எவ்வாறு சொல்லலாம்?

சே :—சொல்ல முடியாது. இன்னும் கேளுங்கள். ஒரு மகா தீட்சணத் திராவகம் உண்டு. அது ரசாயனத்தில் ரொம்ப வேலைகளுக்கு உதவும். அநேகமாக உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களையும் கரைத்துக்கட்டுவிடும்.

நீ :—அக்கினித் திராவகம் என்கிறீர்களே, அதுதானே.

சே :—ஆமாம். அது வளிரம் புணர்ந்த ஆமிலம். வளிரகாமிலம் என்று பெயர். மந்தத்திற்கு நேர் விரோதமான இலக்கணம். தங்கம் ஒன்று தவிர மற்ற எல்லாவற்றையும் தண்ணீரில் உப்பு கரைவது போலக் கரைத்துவிடும்.

நீ :—பயமாயிருக்கிறதே! மூச்சு எடுத்தால் உள்ளே வளிரவாயு ஒன்றும் கட்டுப் போட்டு விடாதே!

சே :—இல்லை, இல்லை. தைரியமாக மூச்சு எடுத்துக் கொள்ளுங்கள். காற்றிலுள்ள வளிரம் ஒன்றும் செய்யாது. பரம சாது.

தீக்ஷிதர் பொடி டப்பியைத் திறந்தார்.

நீ :—அக்கினித் திராவகத்தில் உள்ள வளிரத்திற்கும் காற்றிலுள்ள வளிரத்திற்கும் ஏதாவது பேதமுண்டோ?

சே :—ஒன்றுமில்லை. எல்லாம் சகவாச தோஷம் தான். ஒரே தாது. ஆனால் புணர்ந்த நிலையில் வித்தியாசம் ஏற்படுகிறது.

நீ :—நீங்கள் சொன்னது ரொம்ப சரி. சகவாசத்தினால் பரம சாதுவுங்கூடப் பரம துஷ்டனாகி விடுவான்.

சே :—யாக்கைப் பொருள் ரசாயனத்திற்குப் போனால் இன்னும் மகா விநோதம். நான்கு ஐந்து தாதுப் பொருள்கள், கரிசந்து, நீரகம், வளிரம் இவ்வளவே. இவை ஒருவிதம் கூடினால் அம்ருதம் போன்ற ஆகாரம். கொஞ்சம் மாறுபட்டுக் கூடியிருந்தால் கொல்லும் விஷம்.

நீ :—ஆகா, ரசாயனம் படித்தால் வேதாந்தமே பார்க்க வேண்டியதில்லை போல் தோன்றுகிறது. பையன் வெங்கடராமன் ரசாயனம் படித்திருக்கிறானே, இல்லையோ?

சே :—ரசாயனம், கணிதம், பௌதிகம், இதிகாசம் எல்லாம் படித்திருக்கிறான்.

நீ :—நாமெல்லாம் என்னவோ சாஸ்திரம் படித்தோம் என்று சொல்லிக் கொள்ளுகிறோம். இந்தக் காலத்துச் சிறு பையன்கள் படிப்பதில் ஒரு கால் பங்கு கூட நாம் படித்தது காணாது. ஏன் இன்று அவன் வெளியே வரவில்லை?

சே :—நீங்கள் பேத்தியை அழைத்து வந்திர்களோ இல்லையோ, அதனால் வெட்கம் போலிருக்கிறது.

நீ :—இந்தக் காலத்துப் பையன்கள் அப்படியில்லையே. எதற்கும் தயங்க மாட்டார்களே. பெண்கள் கூடக் கூசாமல் எல்லாப் பேச்சிலும் கலந்து கொள்ளுகிறார்கள். பையன்களைப் பற்றிச் சொல்ல வேண்டியதே யில்லை.

சே :—வெங்கடராமன் அப்படியில்லை, ரொம்ப சாது.

நீ :—அப்படியானால் நம் செல்விக்கு ரொம்பப் பொருத்தமாயிருக்கும். ஜாதகம் அனுப்பட்டுமா?

சே :—சாதகப் பொருத்தத்தில் எனக்கு நம்பிக்கையில்லை. இருவருக்கும் பிடித்துப்போனால் கிரகங்கள் என்ன செய்ய முடியும்?

நீ :—அப்படிச் சொல்லாதீர்கள். எல்லாம் பார்த்துத்தான் ஒரு காரியம் செய்ய வேண்டும். குழந்தையையும் அழைத்துக்கொண்டு நான் போய் வருகிறேன். நமோ நம: (இன்னும் வரும்)

# பரந்த வெளியில்



டீ யை அனுபவித்து அருந்துவதற்கான சமயங்களில் ஒன்று "பிக்னிக்" கள். குடும்பக் கூட்டமானாலும் சரி, நண்பர்கள் கூட்டமானாலும் சரி, டீ க்குத்தான் அங்கு பிரதான இடம். டீ மாத்திரம் கொடுக்கவல்ல ஆனந்தத்தால்தான், நீங்கள் திறந்த வெளியின் அழகையும், களைப்பாறுதலாலுண்டாகும் இன்பத்தையும் அனுபவிக்க முடிகிறது.



எங்கள் புதிய பிரசுரமாகிய "டீ அருந்துவதற்கான சமயங்கள்" என்ற சித்திரங்களுடன் கூடிய புத்தகத்தில், டீ அருந்துவதற்கான சில விசேஷ சமயங்களைப் பற்றி இங்கிலீஷில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த விளம்பரத்தைக் கத்தரித்து, உங்கள் பெயர் விலாசத்துடன், மேற்கண்ட விலாசதாருக்கு அனுப்பினால், அவர் இப்புத்தகத்தின் பிரதி ஒன்று இலவசமாக அனுப்புவார்: கமிஷனர் (இந்தியாவுக்கு), இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டு, தபால் பெட்டி நெ. 2172, கல்கத்தா.



# இந்தியன் டீ

அருந்துங்கள்

புத்துயிரளிக்கும் உயரிய பானம்



இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது IK 159

# கர்வ பங்கம்

ஆசிரியர்: சரத் சந்திர சட்டர்ஜி] [மொழிபெயர்ப்பு: ஆர். ஷண்முகசுந்தரம்

## அத்தியாயம் 4.

**ப**த்துப் பதினைந்து நாளைக்கப்புறம் மத்தியான வண்டியில் இந்துமதி தன் பெண்ணுடன், மிதுனப்பூரி லிருந்து புருஷன் வீட்டுக்கு வந்து சேர்ந்தாள். மனைவியையும், மகளையும் கண்டு அந்நிலையில்கூட நரேந்திரன் சிறிது சந்தோஷமடைந்தான். ஆவலுடன் தன் மகளை மார்போடு அணைத்துக் கொண்டான்.

“சௌக்கியமா, இந்து?” என்று கேட்டான் நரேந்திரன்.

“சௌக்கியம்தான், ஏன்?”

“உனக்கு ஜுரம் என்று எழுதியிருந்ததைப் பார்க்கக் கவலையாக இருந்தது. உடம்புக்கு ஒன்றும் இல்லையே.”

“குணமாகாவிட்டால், நீங்கள் என்ன டாக்டரையா கூப்பிடப் போகிறீர்கள்?”

நரேந்திரனது முகம் வாடியது. “டாக்டரைக் கூப்பிட வில்லையா?” என்றான்.

“கூப்பிட்டு என்ன செய்வது? ஐம்பது ரூபாயை அனுப்பி விட்டு, ‘எப்படி இருக்கிறது உடம்பு? ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்!’ என்று கடிதத்தின்மேல் கடிதம் எழுதித் தள்ளி விட்டீர்கள்! நான் என்ன சின்னக் குழந்தையா? இந்த ஐம்பது ரூபாய்க் காசு என் அண்ணாவால் கொடுக்க முடியாதா? அவர்களுக்கு முன்னால் இந்தப் பணத்தை அனுப்பித்து என்னை ஏன் அவமானப் படுத்த வேண்டும்? அன்றைக்கு வீட்டிற்குள் எங்கு பார்த்தாலும் எல்லோரும் இதைப் பற்றியே தான் பேசிச் சிரித்தார்கள்.”

நரேந்திரன் இன்னும் அதிகத் துக்கமடைந்தான்.

“அதிகமாகக் கிடைக்க வில்லை” என்றான் ரொம்ப மெதுவாக.

“பணத்தை அனுப்பாமலே இதை ஏன் எழுதிவிடக் கூடாது? அப்பா! இனிமேல் பழையபடி ‘இல்லை, இல்லை, கொடு, கொடு’ என்ற தொல்லைதான் தினமும். இத்தனை நாளாகச் சௌக்கியமாக இருந்தேன். உண்மையிலேயே பணக்கார வீட்டுப் பெண்ணை ஏழை வீட்டுக்குக் கொடுப்பதைப் போன்ற பாபம் உலகத்திலேயே வேறு ஒன்றும் கிடையாது!” என்று கூறி, புருஷனை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்து விட்டு அப்பால் சென்றாள்.

ஒரு மாதத்திற்கு அப்புறம் புருஷனும் மனைவியும் முதல் முதலாக இவ்வாறு பேசிக் கொண்டார்கள்.

இந்து தன் அறைக்குள் சென்று பார்த்தாள். உடனே மிகுந்த ஆச்சரியமடைந்தாள். வீட்டின் மற்ற பாகங்களைப் போலவே இங்கும் சாமான்களெல்லாம் நன்கு சீராக வைக்கப் பட்டிருந்தன.

“சாமான்களெல்லாம் ரொம்ப நன்றாக வைத்திருக்கிறதே!”

“நீங்கள் வருவீர்களென்று தான்” என்று புதிய வேலைக்காரி சொன்னாள்.

“நான் வருவேனென்றா?”

“ஆம், அம்மா! பாபுஜிதான் சொன்னார். உங்களுக்கு அழுக்கும் கிழக்குமாயிருப்பது பிடிக்காது என்று. அதனால் இந்த மூன்று நாளாக......”

இந்து மனதிற்குள்ளாகவே மிகுந்த கர்வமடைந்தாள். “குப்பைக் கூளத்தை யாரால்தான் சகிக்க முடியும்? முற்றங் கூட நன்றாயிருக்கிறதே......”

“ஆம், அம்மா! ஆளை விட்டுச் சுத்தம் செய்யச் சொன்னார்.”

“போ, ராமனைக் கூட்டி வா. கடைக்குப் போய்ப் பழங்கள் வாங்கிவரட்டும்.”

“பழம் இருக்கிறது. பாபுஜி அதிகாலையிலேயே கடைக்குப் போய் எல்லாம் வாங்கி வந்து விட்டார்.”

“இளநீர் இருக்கிறதா?”

“இல்லாமலென்ன? இதோ எடுத்துக்கொண்டு வருகிறேன்” என்று கூறி விட்டு வேலைக்காரி சென்றாள். இந்துவின் முகத்திலிருந்த கவலைக் குறி மறைந்து விட்டது. ஆனால் சிறிது நேரத்

திற்கு முன் கண்ட தன் கணவனது கவலை தோய்ந்த முகம்தான் அவள் இதயத்தை வாட்டியது.

சிறிது இளைப்பாறினதிற் கப்புறம் அவள் மிகுந்த சந்தோஷத்துடன் தன் கணவனது அறைக்குள் நுழைந்தாள். நரேந்திரன் ஏதோ எழுதிக் கொண்டிருந்தான். "என்ன விஷயத்தை எழுதுவதில் அப்படி மூழ்கிப் போய் விட்டீர்கள்? கவிதையா?" என்று கேட்டாள்.

நரேந்திரன் தலையை உயர்த்தி "இல்லை" என்றான்.

"பின் என்ன?"

"ஒன்றுமில்லை" என்று கூறி, கடிதத்தை மூடி வைத்து விட்டான்.

இந்துவின் பிரசன்ன வதனம் சஞ்சலமடைந்தது. "ஒன்றுமில்லையே, பின் ஏன் இவ்வளவு பாடுபட்டுக் குனிந்து உட்கார்ந்து எழுதிக் கொண்டிருக்கிறீர்கள்? அண்ணா வசம் வேலை காலியாக எத்தனையோ இடம் இருப்பதாகக் கேள்விப்பட்டேன்" என்று கூறி விட்டு அவனது முகத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். இந்தப் பேச்சு அவன் மனதைப் புண்படுத்தும் என்பதை அவள் நன்கறிவாள். ஆனால் இன்று அவன் முகத்தில் எவ்வித மாறுதலும் இல்லாதிருப்பதைக் கண்டு ஆச்சரியமடைந்தாள்.

நரேந்திரன், சாந்தமாக, "வேலைக்கு அங்கு எத்தனையோ பேர்கள் இருப்பார்கள்" என்றான்.

இந்த எதிர்பாராத பதிலினால் இந்து மிகக் கோபமடைந்தாள். ஒரு கணம் பேசாமலிருந்து விட்டு, "அது எனக்குத் தெரியும். ஆனால் அங்கேதானா இருக்கிறார்கள்? இங்கு இல்லையா, என்ன? நல்ல வார்த்தை சொன்னால் கூட உங்களுக்குக் கெட்டதாகப் படுகிறது. வீட்டின் மூலையில் உட்கார்ந்துகொண்டு கவிதை எழுதுவதற்கு உங்களுக்கு வெட்கமாயில்லை!" என்று சொல்லிவிட்டுத் திரும்பிப் பார்க்காமல் கிளம்பினாள்.

இது இரண்டாவது சந்திப்பு.

* * *

"அடடா! யார் இது, மன்னியா! எப்போது வந்தாய்?" என்று கேட்டாள் விமலா.

"நேற்று மத்தியானம்" என்று பதில் சொன்னாள் இந்து.

"நேற்று மத்தியானமா? அதுதான் இவ்வளவு சீக்கிரமாகத் தரிசன மளிக்க வந்தாயா? வேண்டாம் மன்னி, இத்தனை அன்பையும் ஒரே அடியாக வர்ஷிக்காதே!"

"கடிதம் எழுதினதற்குப் பதில் கூடப் போடவில்லை! ஒருத்தி எத்தனை நாளைக்குத்தான் அன்பை வர்ஷித்துக் கொண்டிருக்க முடியும்?"

விமலா ஆச்சரியத்துடன், "கடிதம் கிடைக்க வில்லையா?" என்றாள்.



"புட்டிகளை எடுத்துப் பார்த்து என்ன பிரயோஜனம்?"

"அது கிடைத்தும் கிடைக்காதது போலத்தான். நாலு பக்கத்திற்குப் பதில் நாலு வரிதானா?"

"அப்போது குளிக்கக்கூட நேரமிருக்கவில்லை, மன்னி. இங்கே அண்ணாவிற்குக் கொஞ்சம் சௌக்கியம் ஆனாலும், அங்கு எங்கள் புதுக் குடித்தனக்காரருக்கு 'இப்பவோ, பிறகோ' என்று ஆகி விட்டது."

இந்துவுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. பேசாமல் கேட்டுக் கொண்டிருந்தாள்.

விமலா ஒன்றையும் கவனிக்காமல், "அந்தச் செவ்வாய்க் கிழமை என்றைக்கும் எனக்கு ஞாபகத்திலிருக்கும். ஏழு நாள் கழித்துத் தகவல் தெரிந்த பிறகு நான் அண்ணாவைப் போய்க் கூட்டிக் கொண்டு வந்தேன். இரண்டு நாளைக்குப் பிறகு வலி ரொம்ப அதிகரித்து விட்டது. நாங்களெல்லாம் பயந்தே போய் விட்டோம். அங்கு அம்பிகா பாபுவுக்கும் ஜுரம் அதிகரித்து விட்டது. என்ன சொல்லட்டும் மன்னி, ஒத்தடம் கொடுத்துக் கொடுத்து வீட்டிலிருப்பவர்களுக்கெல்லாம் கை வெந்து போயிற்று! இரவு பகல் ஒருவராவது அந்தப் பக்கம் இந்தப் பக்கம் போகவில்லை. அம்பிகா பாபுவின் மனைவியை சதி சாவித்திரி என்றுதான் சொல்லுவேன். சின்னப் பெண்தான், இருந்தாலும் எவ்வளவு புத்திசாலித்தனம், எப்படி எல்லாம் காரியங்கள் செய்கிறாள் தெரியுமா? அவளுடைய புண்ணியத்தால் அவர் இப்போது தப்பித்துக் கொண்டார். பின் வேறு மருந்து ஒன்றும்......"

"அம்பிகா பாபு யார்?"

"தெரியாது! காடாலுக்குப் பக்கம் எங்கேயோ இருப்பவர்கள். வைத்தியத்திற்காக இங்கு வந்திருக்கிறார்கள். நம் பக்கத்து வீட்டில்தான் குடியிருக்கிறார்கள்......"

இந்து இடைமறித்து, "உங்க அண்ணாவிற்கு உடம்பிற்கு என்ன?" என்றாள்.

"என்னவா! அன்று இராத்திரி நிஜமாகவே நான் பயந்து போய்விட்டேன், அந்தப் பக்கம் மருந்துப் புட்டிகள் குவிந்து கிடக்கிறதைப் பார்க்கலையா? மும்மூன்று டாக்டர்கள்! ஏன் மன்னி. அண்ணா உனக்குக் கடிதத்தில் இவைகள் ஒன்றையும்பற்றி எழுதவில்லையா?"

இந்து எதையோ யோசித்துக் கொண்டு, "இல்லை" என்றாள்.

"இங்கு வந்துதான் கேட்டிருப்பாய்?"

---

"ஆம்" என்றாள் இந்து.

"நான் உனக்கு முதல் நாளே தந்தி கொடுக்கவேண்டுமென்று நினைத்தேன், இரண்டு, மூன்று மணிக்குள் வந்து விடலாம். அல்லவா? ஆனால் அண்ணா வேண்டாமென்று சொல்லிவிட்டான்."

பிறகு சிரித்துக்கொண்டு, "அவரை நீ என்ன செய்து வைத்திருக்கிறாய் என்பது உனக்குத்தான் தெரியும். ஜுரமாயிருக்கிறபோது பயந்து கொள்ளப் போகிறாள் என்று நினைத்து உனக்குத் தகவலே கொடுக்காமலிருந்து விட்டார். கடவுள் கிருபையால் அவருக்குக் குணமாகிவிட்டது, இல்லாவிட்டால்—"

"இல்லாவிட்டால் என்ன விமலா? நோய் குணமடைந்த பிறகும் ஒன்றும் வேண்டியிருக்கவில்லை. நோய் குணமடையாதிருந்தாலும் வேண்டித்தானிருக்காது" என்று கூறிவிட்டு இந்து எழுந்து போய் மருந்துப் புட்டியில் ஒட்டியிருந்த லேபிளைப் படிக்க ஆரம்பித்தாள்.

எப்போதுமே நடைபெறாதது இன்று என்ன புதிதாக நடந்தது? இன்று திடீரென அவள் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது! "அவர் எனக்கு ஒன்றும் ஆக வேண்டியதில்லையா? இவ்வளவு பெரிய நோயில் விழுந்தும் விஷயமே தெரிவிக்கவில்லையே! அப்படி நான் தான் என்ன சங்கடமான நிலைமையில் இருந்தேன், நோய் விஷயத்தைத் தெரிவிக்கக் கூடாது என்பதற்கு? குணமடைந்த பிறகு கூட அவர் கடிதத்தில் எத்தனையோ விஷயங்களைப் பற்றி எழுதி இருந்தாரே! தன் சொந்த விஷயத்தை மட்டும் எழுத மறந்து விட்டாரா? நன்றாயிருக்கிறது! இங்கே நான் வந்துகூட மூன்று நாளாகிறதே? இன்னும்கூட ஞாபகம் வரவில்லையா?"

என்று இவ்விதமெல்லாம் தோன்றியது. "மன்னி, மருந்துப் புட்டிகளை இப்பொழுது எடுத்துப் பார்த்து என்ன பிரயோஜனம்? நீ என்ன பரீட்சித்துப் பார்த்தாலும் அவைகள் ஒன்றும் உன்னிடம் பொய் சாட்சி சொல்லாது! வா, உனக்கு டீ தயாராக இருக்கிறது. எழுந்திரு" என்று கூறிவிட்டு, விமலா மௌனமாக இந்து அருகில் சென்று நின்றாள்.

டீ குடித்தான பிறகு விமலா, எதை உத்தேசித்துச் சொன்னாளோ தெரியவில்லை. "அது எவ்வளவு வேடிக்கையாக இருந்தது தெரியுமா, மன்னி? ஒரே வீட்டில் இரண்டு நோயாளிகள், ஆனால் இரண்டு பேருக்கும், வெவ்வேறு நிலைமை! நீ எங்கு பயந்து விடுவாயோ என்று அண்ணா இறக்கும் வரையில் கூட உனக்குத் தகவல் அனுப்பலாகாதென்று சொல்லி விட்டார். உன்னுடைய நிலைமை மோசமாகி விடுமோ என்ற பயத்தால்தான்! ஆனால், அம்பிகா பாபுவோ, ஒரு கணம்கூடத் தன் மனைவியை அப்பால் இப்பால் போக விடவில்லை. அவள் தன் கண் மறைவாகச் சென்று விட்டால் உயிர் போய் விடும் என்று அவர் பயந்தார். தன் மனைவியைத் தவிர்த்து, வேறு யார் கையினாலும் அவர் மருந்துகூட வாங்கிச் சாப்பிடுவதில்லை. இப்படி நீ எங்காவது கேள்விப் பட்டிருக்கிறாயா? இரவு பகல் என்று பாராமல் உழைத்து அவள் உடம்பு துரும்பாகப் போய் விட்டது" என்றாள்.

இந்துமதி 'உம்' கொட்டி விட்டு எழுந்து நின்றாள். "இன்னொரு நாளைக்கு வந்து உன்னுடைய சதி சாவித்திரியுடன் பேசிக் கொள்கிறேன். இன்று வண்டி வந்து விட்டது. போய் வருகிறேன்" என்றாள்.

"சரி, நாளைக்குக் கட்டாயம் வர வேண்டும். பேசிப் பேசியாவது சுகமடைந்து கொள்ளு."

"பார்க்கலாம், என்னவோ கொஞ்சம் கற்றுக் கொள்கிறேன்" என்று முகத்தைச் சுளித்துச் சொல்லிக் கொண்டே இந்து போய் வண்டியில் உட்கார்ந்தாள்.

அம்பிகா பாபுவின் பைத்தியக்காரத்தனத்தை எண்ணி அவள் வழி நெடுகச் சிரித்துக் கொண்டே போனாள்.

(தொடரும்)

---

## அபாயச் சங்கு!



கோபு பரீட்சையில் தேறாததற்காக அப்பா அடிக்க வருவதைப் பார்த்து, அவனை ஒளிந்து கொள்ளும்படி அண்ணா சங்கு ஊதுகிறான்!




குற்றால ஸ்நானத்தின் குளிர்ச்சியைத் தரும்

**டி. எஸ். ஆர். & கோ**

வாஸனா திரவிய வியாபாரிகள், கும்பகோணம்

மதராஸ் ஸிடி ஏஜெண்டுகள் :

**புஷ்பவனம் ஸ்டோர்ஸ், பைக்ராப்ட்ஸ்ரோடு, திருவல்லிக்கேணி**

ஸ்டாக்கிஸ்டுகள் :

| | | |
|---|---|---|
| எஸ். கிருஷ்ண அண்டு கம்பெனி<br>ஜெனரல் மர்ச்செண்ட்ஸ், தென்காசி | ஸ்ரீ. ஆர். கிருஷ்ணசாமி நாயுடு<br>ஜெனரல் மர்ச்சண்ட்ஸ், தென்காசி | ராஜா அண்டு கம்பெனி<br>புதுக்கோட்டை |

# ஸ்ரீ ஸூர்யநாராயண சாஸ்திரி

[வே. நாராயணன்]

தென் இந்திய மேதாவிகளுள் ஒருவராகச் சிறந்து விளங்கிய ஸ்ரீ ஸூர்ய நாராயண சாஸ்திரிகள் சென்ற டிஸம்பர் ஒன்பதாம் தேதி அன்று பரகதி யடைந்த செய்தி நண்பர்களைத் துக்கத்துக் குள்ளாக்கி யிருக்கிறது.

ஸ்ரீ சாஸ்திரியார் மதுரைக்கு அருகிலுள்ள விளாச்சேரி கிராமத்தில் பிறந்தவர். இவர் வம்சத்தவர்கள் பரம்பரையாகவே வைதிக சிரத்தையுடையவர்கள். இளம் வயதிலேயே இவர் படிப்பிலே தேர்ச்சி பெற்றவராகக் காணப்பட்டார். இருபதாவது வயதிலே தத்துவ சாஸ்திரத்தில் முதல்தரமாகப் பாஸ் செய்து எம். ஏ. பட்டமும் பெற்றார். பிறகு மேற் படிப்பிற்காகச் சீமைக்குச் சென்று அங்கே தத்துவ சாஸ்திரம் பயின்று பீ. எஸ். ஸி. பட்டமும் சட்ட பரீக்ஷையில் தேறி, பார்-அட்-லா பட்டமும் பெற்றார். அவர் எழுதிய "ப்ராட்லியும் சங்கரரும்" என்னும் கட்டுரைக் காகத்தான் அவருக்கு பி. எஸ். ஸி. பட்டம் கொடுக்கப்பட்டது. மேற்படி கட்டுரையைக் கண்ணுற்ற ப்ராட்லி 'என்னும் பிரபல தத்துவ சாஸ்திரி, தான் பரந்த நூலில் சொல்லியுள்ளவற்றைத் தன்னாலேயே எழுத முடியாதவாறு அவ்வளவு தெளிவாகவும் சுருக்கமாகவும் இவர் கூறி யுள்ளதைக் கண்டு வியந்தார்.

இங்கிலாந்திலிருந்து திரும்பி வந்த பின் சில வருஷங்கள் ஸ்ரீ சாஸ்திரியார் மதுரை காலேஜ் பிரின்ஸிபாலாக இருந்தார். 'தமிழ் யுனிவர்ஸிடி கமிஷ'னில் ஒரு அங்கத்தினராகித் தாய் மொழிக்காக ஆர்வத்தோடு உழைத்தார்.

சென்னை சர்வகலாசாலையில் தத்துவ சாஸ்திர ஆராய்ச்சிப் பகுதி ஸ்தாபிக்கப் பெற்றது முதல் இவரே ஆராய்ச்சியாளராக அமர்ந்து பல நூல்களையும் ஆராய்ந்து பதிப்பித்ததோடு பல வித்வான்களையும் ஆராய்ச்சி முறையில் பழக்கித் தேர்ச்சி பெறச் செய்திருக்கிறார். இந்திய தத்துவ காங்கிரஸின் காரியதரிசியாகப் பத்து வருஷங்கள் சேவை செய்து வந்திருக்கிறார். தத்துவ சாஸ்திர ஆராய்ச்சி யென்றால் சாஸ்திரியாருக்கு அலாதி ஆர்வம். சமய வாதங்களின் நுட்பங்களைத் தெளிவாகத் தெரிந்து கொண்டு அவற்றை எல்லோருக்கும் விளங்கும்படி அழகிய நடையிலே அவர் எடுத்துக் கூறும் திறமை ஒப்பற்றது.

சில வருஷங்களாக அத்வைத சித்தாந்த உண்மைகளை விளக்குவதில் மிகவும் ஈடுபட்டிருந்தார். இந்திய ஞானிகளின் அனுபவங்களையும் உபதேசங்களையும் ஆராய்ந்து விளக்குவதிலும் மனஞ் செலுத்தினார். இராமகிருஷ்ண பரமஹம்ஸர், ஸ்ரீ ரமண மஹர்ஷி, ஸ்ரீ அரவிந்தர், ஸ்ரீ கிருஷ்ணாஜி இவர்களுடைய அனுபவங்களையும் உபதேசங்களையும் ஆராய்ந்தார். அத்வைதத்தை விளக்கும் ஒரு பெரிய நூல் எழுதுவதற்கு வேண்டிய விஷயங்களைச் சேகரித்தார். அந் நூலில் ஒரு அத்தியாயம் மட்டுமே எழுதி முடிந்தது. அதற்குள் துரதிர்ஷ்ட வசமாக அகால மரணம் நேர்ந்து விட்டது.



இவர் எழுதியவற்றிலும் பேசியவற்றிலும் காணப்பட்ட தெளிவும் நேர்மையும் அழகும் இவருடைய உள்ளத்திலிருந்த தெளிவு, நேர்மை, அழகு ஆகிய வற்றால் எழுந்தன என்பதை இவருடன் சிறிதே பழகிய நண்பர்களும் அறிவார்கள்.

இவ்வளவு திடமான ஞானம் படைத்த இவருக்கு அதற்கேற்றவாறு திடகாத்திரமும் நீண்ட ஆயுளும் வாய்க்காம லிருந்தது நமது துரதிருஷ்டமாகும்.

# எந்த நல்ல சந்தர்ப்பத்திற்கும்



BY APPOINTMENT TO THE MOST HONOURABLE THE MARQUESS OF LINLITHGOW, VICEROY AND GOVERNOR GENERAL OF INDIA

சிநேகிதர்கள், தேயிலை பானம், டிலக்ஸ் டெனர் சிகரெட்டு இவைகளின் கூட்டுறவே ஒரு தனி ஆனந்தம். ஆனால் டெனர் சிகரெட்டின் நறுமணத்தை எப்போதுமே அனுபவிக்கலாம். உத்தரவாதமுள்ள 100% பொறுக்கின வர்ஜீனியா புகையிலை தான் டெனர்ஸ் செய்ய உபயோகிக்கப்படுகிறது. சுகமுள்ள இந்த சிகரெட்டை நீங்களும் வாங்க முடியும். பெரிய, ஸ்டாண்டர்ட் சைஸ்களில் எங்கும் கிடைக்கும்.

# TENOR
## de luxe CIGARETTES

டி லக்ஸ் டெனர் சிகரெட்ஸ்

ஜேம்ஸ் கார்ல்டன் லிட்., லண்டன்




உங்களது உத்தரவாதம்

# பெண்கள் உலகம்

"லக்ஷ்மி"

## 4. வள்ளி

**"வள்ளி கணவன்பேரை**
**வழிப்போக்கர் சொன்னாலும்**
**உள்ளம் குழையுதடி—கிளியே**
**ஊனும் உருகுதடி"**

என்ற பாட்டின் அடியை எங்கே கேட்டாலும் எனக்கு எங்கள் வேலைக்காரி வள்ளியின் ஞாபகம் வருகிறது.

வள்ளிக்கு வயது முப்பதிருக்கும். கருப்பான முகத்தில் பளீரென்று ஒளி வீசும் பற்கள். நல்ல திடகாத்திரமான தேகம். எப்பொழுதும் சிரித்துக் கொண்டே துடுக்காகப் பேசுவாள். ஒருவருக்கும் பயப்படவே மாட்டாள்.

"வள்ளியா! அவளுக்கு எமன் வந்தா கூட பயம் கிடையாதே" என்று பாட்டி அவளை தினம் ஆசீர்வாதம் செய்வாள்.

விடியற்காலை நான்கு மணிக்கு மாடி வராந்தாவில் கையில் துடப்பமும் இடுப்பில் குடமுமாகக் காட்சியளிப்பாள்.

"எழுந்திரு சாமி! படிக்கிற குழந்தை காலங்கார்த்தாலே எழுந்து புஸ்தகத்தை வச்சிக்கிட்டுப் படிக்கிறதை விட்டுவிட்டு போத்திட்டுத் தூங்கறதைப் பாரு!" என்று உச்சஸ்தாயியில் அதிகாரம் பண்ணுவாள்.

கொஞ்சம் சோம்பேறித்தனமாகப் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தாலோ கடகடவென்று ஜலத்தைக் கொட்டி வராந்தாவை அலம்ப ஆரம்பித்து விடுவாள். படுக்கைமேல் ஜலப் பிரளயம் ஆவதற்குள் அலறி அடித்துக் கொண்டு எழுந்திருந்து கையுடன் படுக்கையைச் சுருட்டிக் கொண்டு கிளம்புவேன்.

"என்ன உனக்கு இவ்வளவு அவசரம்! ஜலத்தைத் தலையிலே கூடக் கொட்டி விடுவே போலிருக்கே?" என்று சள்ளென்று விழுவேன்.

"இன்னும் கொஞ்ச நேரம் தூங்கினால் தண்ணியைக் கொணாந்துத் தலையிலே ஊத்தி விடுவேன். அங்கே பாரு எதிர்த்த வீட்டுப் பொம்பளைப் பிள்ளையை. மூணு மணிக்கே எழுந்து உட்கார்ந்துகிட்டுப் பரிச்சைக்குப் படிக்குது!" என்று புத்திமதி கூற ஆரம்பிப்பாள்.

"தினம் தினம் இப்படி வீடெல்லாம் அலம்பாவிட்டால் குடிமுழுகிப் போகிறதா?" என்று நான் கோபிப்பேன்.

"ஏன் சாமி! நானு வீடு முழுதும் தினம் கழுவணுன்னு ஒரு காலில் நிக்கிறேன்? உங்க பாட்டியம்மா இருக்குதே, அதுக்குப் படுத்த இடத்தைக் கழுவாட்டி பீடை பிடிச்சுக்குமாம். அது சத்தம் போடுதேன்னு சட்டு பிட்டுனு தண்ணியை ஊத்தி இரண்டு பெருக்குப் பெருக்கிட்டுப் போறேன்" என்று சொல்லி விட்டுச் சிரிப்பாள்.

"என்னடி வள்ளி! இப்படி கால்படி எண்ணையைத் தலையில் வைத்து வாரிக் கொண்டு வந்திருக்கிறயே. காதுப்படிகளில் எண்ணை வழியறது" என்று மன்னி வள்ளியைப் பரிகாசம் செய்வாள்.

"ஏம்மா, இல்லாட்டி அந்த எதிர்த்த வீட்டுப் பொண்ணுட்டம் தலையிலே



வேலைக்காரி வள்ளி

என்னை வைக்காம பரட்டையாக வாரிக்கச் சொல்றீங்களா? அந்தப் பொண்ணு தலை வாரிக்கறதே வேடிக்கை. தலையை நல்லா வாரிப் பின்னிக்கும்; அப்பறம் கண்ணாடி முன்னாலே போய் நின்னுக்கிட்டு, காது பக்கத்திலும் நெத்திப் பக்கத்திலும் தலை மயிரை இழுத்து, வாரின தலையைக் கலைச்சு விட்டுக்கும். எப்பப்பார்த்தாலும் ஒரு கொத்துத் தலை மயிர் அவரைக்கொடியாட்டம் கன்னத்திலே பட்டுக்கிட்டுக் கிடக்கும். இது என்னம்மா நாகரிகம்?" என்று சொல்லி விட்டுக் கடகட வென்று சிரிப்பாள்.

"போடி, வாயாடி!" என்று மன்னி அவளை அன்புடன் கோபித்துக் கொள்வாள்.

சட் சட்டென்று மின்னலைப் போல் நொடிப் பொழுதில் வேலை யெல்லாவற்றையும் செய்து விடுவாள் வள்ளி. முற்றத்தில் பாத்திரங்கள் உருளும் சத்தம் கேட்டால் "வள்ளி வந்து விட்டாளா? பாத்திரச் சத்தம் காதைப் பிளக்கிறதே. கொஞ்சம் மெதுவாகப் பாத்திரங்களைத் தேய்க்கச் சொல்லு. புது ஈயச் சொம்பை நசுக்கிவிடப் போகிறாள்" என்று பாட்டி உள்ளேயிருந்து கத்துவாள்.

"சும்மா இரு பாட்டி! ஈயச் சொம்பு போனால் இதோ சின்னப் பேரன் இருக்குது. வெள்ளிச் சொம்பா வாங்கி வைக்க" என்று ஏகத் தாளமாய்ப் பதிலுக்கு உரத்த குரலில் கூறி விட்டுத் தன் காரியத்தில் அமர்ந்து விடுவாள் வள்ளி.

"இந்தா சாமி! காபியைக் குடிச்சு விட்டுத் தம்ளரை ரொம்ப சவடாலா மேஜை மேலேயே போட்டுட்டுப் போறியே. இங்கே கொணுந்து போடு. கையோட கழுவி வச்சு விட்டுப் போறேன். சீக்கிரம் ஊட்டுக்குப் போகாம இங்கே சித்த நேரம் நின்னுக் கூடப் போதும். உங்க பாட்டியும் மன்னியும் நினைச்சு நினைச்சு ஏதாவது வேலை சொல்லிக்கிட்டே இருப்பாங்க" என்பாள் போக்கிரித்தனமாக.

"என்னடி சினிமாவிலே ஆடறாப் பலே கையையும் காலையும் ஆட்டிண்டு பேசறே. மேலே வந்து விழுந்துடாதே" என்று பாட்டி சில சமயங்களில் வள்ளியைக் கோபித்துக் கொள்வாள்.

"பாட்டி! அப்படிச் சினிமாவிலே யாவது சேந்துகிட்டாப் பிரயோசனம் உண்டு. நாலு ரூபாக் காசுக்கு நாலு வீட்டு வாசல் ஏறி மாடாட்டமா உழைக்கறத்துக்கு சினிமாவிலே ஆக்ட் பண்ணினா ஆயிரம் ஆயிரமா சம்பாதிக்கலாம். பாட்டி! நீயும் வா. இரண்டு பேரும் போய் சேந்துக்கலாம். இந்தக் காலத்திலேதான் பாட்டியம்மான் எல்லாம் படத்திலே ஆக்ட் பண்ணறாங்களே. கொஞ்சம் பவுடரை கனமா மூஞ்சியிலே அப்பிக்கிட்டா கிழவியெல்லாம் குமாரியாய் விடுவாங்களாம் சினிமாவிலே. ஏம்மா! சீதாக் கல்யாணம் பார்த்திங்களா. என்னாட்டம் ஒத்தி வந்து இப்படிப் பாடி ஆடறாளே!" என்று கூறிக்கொண்டு கர்ண கடூரமான ராகத்தில் பாடிக்கொண்டு அபிநயம் பிடிக்க ஆரம்பித்து விடுவாள் வள்ளி.

"போருமடி! அவர் வரப் போகிறார். நிறுத்து உன் நடனத்தை" என்று மன்னி சிரித்துக்கொண்டே சொன்னான்.

"உன் புருசனைக் கண்டால் உனக்குத் தான் பயம். எனக்கென்ன பயம்? ஏன் சாமி நான் சொல்றது சரிதானே?" என்று என்னை வள்ளி அபிப்பிராயம் கேட்பான்.

"ஏண்டி, உனக்கு உன் புருஷனிடம் கூட பயம் கிடையாதாடி!" என்று மன்னி ஆச்சரியத்துடன் கேட்பான்.

"என்னத்துக்கு அம்மா பயம்? முன்னெல்லாம் கள்ளைக் குடிச்சுக்கிட்டு அது கண்டபடியெல்லாம் திரிஞ்சுக்கிட்டிருந்தது. 'இப்படிக் கெட்டுத் திரிஞ்சா உன்கிட்ட நான் குடித்தனம் பண்ணமாட்டேன். அம்மா வீட்டுக்குப் போய் ஏதாச்சும் வேலை வெட்டி செய்து பிழைச்சுக்கிறேன்' என்று ஒரு நாள் மிரட்டினேன். பயந்துக்கிட்டு பொட்டிப் பாம்பா அடங்கிப் போச்சு. இந்தப் புருஷர்களையெல்லாம் மிரட்டி உருட்டி நமக்கு நடுங்கறாப்பலே ஆட்டி வைக்கணும், அம்மா" என்று இல்லற ரகஸ்யத்தை மன்னிக்கு உபதேசம் பண்ண ஆரம்பிப்பாள்.

"போரும்; வீட்டுக்குப் போடி எமகாதகி!" என்று பாட்டி வைத பிறகுதான் வள்ளி நகருவாள்.

வள்ளியைப் போன்ற புத்திசாலியை, கலாசாலை மாணவிகளுக்குள்ளே கூடப் பார்ப்பது அரிது என்பது என் அபிப்பிராயம்.




டிபென்ஸ் ஸேவிங்ஸ் ஸர்ட்டிபி கேட்டுகளை ஒழுங்காக வாங்குங்கள்.

இதனால் நமது சிப்பாய்களுக்கு நவீன யுத்த ஆயுதங்களும்.



அதிவேகமாகப் பறக்கும் ஆகாய விமானங்களும் கொடுப்பதற்கு நீங்கள் உதவுகிறீர்கள்; இதுமட்டுமல்ல...



இந்தியக் கைத்தொழிலை விருத்தி செய்வதற்கும்



ஆயிரக் கணக்கான மக்களுக்கு வேலை கிடைக்கவும் நீங்கள் உதவி செய்கிறீர்கள்

மேலும், வெற்றி கிடைக்கும்போது —நிச்சயமாக கிடைக்கத்தான் போகிறது—



நீங்களும் யுத்தத்தில் வெற்றி பெற உதவி செய்தீர்கள் என்று சந்தோஷப்படுவீர்கள். உங்கள் பணத்தை புத்திசாலித் தனமாகவும், லாபகரமாகவும் உபயோகித்ததற்காக நீங்கள் மகிழ்வீர்கள்.

## டிபென்ஸ் ஸேவிங்ஸ் ஸர்ட்டிபி கேட்டுகளை வாங்குங்கள்

★ இந்தியா கவர்ன்மெண்டாரால் உத்திரவாத மளிக்கப்பட்டது

★ எப்பொழுது வேண்டுமானாலும் பணமாக மாற்றிக்கொள்ளலாம்

★ ஒவ்வொரு ரூ. 10-க்கும் ரூ. 3-9-0 லாபம்

எந்த தபாலாபீஸிலும் கிடைக்கும்.

# கம்பர் தரும் காட்சி

[ டி. கே. சிதம்பரநாத முதலியார் ]

## 37. வசிஷ்டர் ஸ்தம்பிக்கிறார்!

"செல்வத்தை எல்லாம் துறக்கிறாய், போகட்டும். எங்களையுமா கையை விட்டுத் துடைக்கப் பார்க்கிறாய்" என்று இதயம் உருகிப் போகும் நிலையில் லக்ஷ்மணன் சொல்லி அப்படியே நின்று விட்டான். ராமனும் லக்ஷ்மணனது தாங்க முடியாத துயரத்தைக் கண்டு கொண்டான். அவ்வளவுதான்: ஸ்தம்பித்துப் போய்விட்டான். தமையனும் தம்பியும் உணர்ச்சி இழந்தவர்களாய் எதிர் எதிரே நிற்கிறார்கள். எவ்வளவு நேரம் நிற்கிறார்களோ சொல்ல முடியாது.

இந்த நிலையில் படுதா விழ வேண்டியதுதானே! படுதா விழுவதற்குப் பதிலாக, அரச சபையிலிருந்து வருகிறார் ஒருவர்.

அவ்வயின், அரசவை
 நின்றும் அன்பினன்
எவ்வம் இல் இருந்தவ
 முனிவன் எய்தினன்;—
செவ்விய குமரரும்
 சென்னி தாழ்ந்தனர்;
வெவ்வையம் பெருங்கடல்
 முனியும் கால்வைத்தான்.

[அவ்வயின்: அந்த சமயத்தில்; அரசவை நின்றும்: ராஜ சபையிலிருந்து; அன்பினன் எவ்வம் இல் இருந்தவ முனிவன்: ராஜகுடும்பத்தில் பேரன்புடையவனும் யாதொரு பழுதும் இல்லாமல் தவ ஒழுக்கத்திலேயே நிற்பவனுமான வசிஷ்டர்; எய்தினன்: வந்து சேர்ந்தார்; செவ்விய குமரரும் சென்னி தாழ்ந்தனர்: ராம லக்ஷ்மணர்கள் முனிவரை வணங்கினார்கள்; வெவ்வையம் பெருங்கடல் முனியும் கால் வைத்தான்: வசிஷ்டர் துன்பம் துயரம் எல்லாம் கடந்த யோகியாய் இருந்தாலும் துன்பமாகிய கடலில் இறங்கி விட்டார்.]

வசிஷ்டர், ராம லக்ஷ்மணரது முகத்தைப் பார்த்தார். ஏதோ அடுத்த ஊருக்குப் போய் வந்து விடுவதாகத் தோன்றுகிறதே ஒழிய, நாட்டை விட்டு நகரத்தை விட்டுக் காட்டுக்குப் போவதாகத் தோன்றவில்லை.

அன்னவர் முகத்தினூ(டு)
 அகத்தை நோக்கினன்,
பொன்அரைச் சீரையின்
 பொலிவை நோக்கினன்;
என் இனி உணர்த்துவது,—
 எடுத்த துன்பத்தால்
தன்னையும் உணர்ந்திலன்,
 உணரும் தன்மையான்.

[என் இனி உணர்த்துவது: இவர்களுக்கு இனிமேல் என்னத்தைச் சொல்ல இருக்கிறது; எடுத்த துன்பத்தால்: இதயத்தில் பொங்கி வரும் துன்பத்தால்; தன்னையும் உணர்ந்திலன்: வசிஷ்டர் தன்னை உணர்ந்தவர்தான், தலைவனையும் (கடவுளையும்) உணர்ந்தவர்தான், ஆனால் அளவில்லாத துன்பம் வந்து மனசைத் தாக்கவும் அவருக்கும் தன் வசம் அழிந்துவிட்டது.]

சிறிது நேரம் கழித்து உணர்ச்சி வந்தது வசிஷ்டருக்கு. தனக்குள்ளே சொல்லிக் கொள்ளுகிறார்: "விதிதான் என்ன வேலை செய்கிறது! சகல தேசங்களுக்கும் சக்கரவர்த்தியாக வேண்டிய மங்கள கரமான நாளை ஏற்படுத்தினார்கள்; சாஸ்திரங்களை எல்லாம் புரட்டிப் பார்த்துத்தான் ஏற்படுத்தினார்கள். ராமன் பொன் முடிசூடிப் பொன் ஆடை தரித்து விளங்க வேண்டிய முகூர்த்தம். ஆனால் என்ன நேர்ந்திருக்கிறது!

'வாழ்வினை நுதலிய
 மங்கலத்து நாள்,
தாழ்வினை அதுவரச்
 சீரை சாத்தினன்;—
சூழ்வினை நான்முகத்(து)
 ஒருவர் சூழினும்
ஊழ்வினை ஒருவரால்
 ஒழிக்கற் பாலதோ'

[வாழ்வினை நுதலிய: நல்ல வாழ்க்கையைக் குறிப்பிட்ட; தாழ்வினை: கேடான பூர்வவினை

யின் பயன்; சூழ்வினை நான்முகத்து ஒருவர்ச் சூழினும் : பலவிதமாய் வந்து தாக்கும் விதியை வகுக்கிற பிரும்மாவையே (ஊழ்வினை) சூழ்ந்து விட்டால், அதை அவனாலும் விலக்க முடியாதுதான்.]

வசிஷ்டர் கொஞ்சம் தைரியங் கொண்டு ராமனை அணுகிச் சொல்லுகிறார் :

வில்தங்,தடம் தாமரைச்
செங்கண் வீரனை

உற்றடைந்(து), 'ஐய! நீ
ஒருவி, ஓங்கிய

கல்த்தடம் காணுதி
என்னில்,— கண் அகல்

மல்த்தடம் தானையான்
வாழ்கி லான்' என்றான்.

[வில் : வில்லை ஏந்திய; தடம் தாமரைச் செங்கண் வீரனை : விசாலமான செந்தாமரைக் கண்ணன் ராமனை; உற்று அடைந்து : நெருங் கிப்போய்; ஒருவி : நீங்கி; கல்தடம் காணுதி என்னில் : கல்மலையைச் சேருவையேயானால்; கண் அகல் : விரிந்து நிற்கும்; மல்தடந்தானை யான் : போர்வல்ல பெரிய சேனையையுடைய தசரத சக்கரவர்த்தி.]

தந்தை இறந்து போவான் என்று சொல்லி, அதன் மூலமாகக் காட்டுக் குப் போவதைத் தடுக்கப் பார்க்கிறார் வசிஷ்டர் என்று எண்ணுகிறான் ராமன். ராமன் சொல்லுகிறதைக் கேளுங்கள்.

'அன்னவன் பணி,தலை
ஏந்தி ஆற்றுதல்

என்னது கடன்; அவன்
இடரை நீக்குதல்

உன்னது கடன்; இது
நெறியும்'; என்றனன் :

பன்னகப் பாயலுள்
பள்ளி நீங்கினான்.

[அன்னவன் பணி தலை ஏந்தி ஆற்றுதல் : தசரதனது கட்டளையைச் சிரமேற்கொண்டு ஒழுகுதல்; என்னது கடன் : என்னுடைய கடமை; இது நெறியும் : இதுவே தர்மமும் ஆகும்: பன்னகப் பாயலுள் பள்ளி நீங்கினான்: ஆதிசேஷ சயனத்தை விட்டு நீங்கி அவதாரம் செய்த திருமாலாகிய ராமன்.]

மேலும் சொல்லுகிறான் ராமன் ஆத் திரத்தோடு :

தந்தையல்லவா வரங்களைக் கைகேயிக்குக் கொடுக்க ஒப்புக் கொண் டார்? காட்டுக்குப்போகும்படி கட்டளை யிட்டது தாயல்லவா? இந்த நிலையில் குல குருவாகிய நீர் செய்ய வேண்டுவ தென்ன!

'ஈன்றனன் எந்தைஇவ்
வரங்கள்; ஏவினாள்

ஈன்றவள்; யானது
சென்னி ஏந்தினன்;

சான்றென நின்றநீ
தடுத்தி யோ!' என்றான்;—

தோன்றிய நல்லறம்
நிறுத்தத் தோன்றினான்

[ஈன்றனன் : கொடுக்க ஒப்புக்கொண்டான்; சான்று என நின்ற நீ : எல்லாவற்றையும் நேருக்கு நேரே பார்த்துக்கொண்டு வந்த நீ; தடுத்தியோ : தடுக்கப் பார்க்கிறாயோ; தோன் றிய நல்லறம் : அறுதியாய் மக்களுக்குத் தென்பட்ட தருமத்தை மறுபடியும் நிலை நிறுத்துவதற்காக அவதரித்த ராமமூர்த்தி.]

இந்த விதமாகக் கடிந்து சொல்லி விட்டான் ராமன்.

என்றபின் முனிவன்ஒன்(று)
இயம்ப நேர்ந்திலன்,

நின்றனன், நெடுங்கண்நீர்
நிலத்து நீர்த்துக :—

வசிஷ்டர் இத்தனை துன்பத்தில் என்ன செய்வார்? பேசாமல் நின்றுவிடுகிறார். காட்டுக்குப் போகிறான் ராமன், என் பதை எண்ணத் தான் முடியுமா? மனந் தான் சகிக்குமா? ஒன்றும் பேச முடி யாமல் நின்று விட்டார். சௌகரிய மாய்ப் போய்விட்டது ராமனுக்கு!

குன்றனத் தோளவன்
தொழுது, கொற்றவன்

பொன்திணி நெடுமதில்
வாயில் போயினான்.

[குன்றன தோளவன் : ராமன்; தொழுது : அப்படியே வசிஷ்டரைத் தொழுதுவிட்டு; கொற்றவன் : தசரதனது; பொன்திணி நெடு மதில் வாயில் : பொன் இழைத்த மாதிரி அலங் கரித்த கோட்டை வாசல் பக்கமாக.]

பதினான்கு வருஷம் சந்திக்க முடியாத படி பிரிந்து போகிறநிலைமை. வசிஷ்டர், ராமனை உயிருக்குயிராய்க் கருதி வளர்த் தவர்; அவனுக்குக் கல்வி எல்லாம் கற்பித்தவர். அவரிடம் விடை பெற்றுக் கொள்ளுவது ராமனுக்கு எளிதான காரியமா? அல்ல.

எவ்வளவு லாகவமாய் வசிஷ்டரை ஸ்தம்பித்து நிற்கச் செய்து விடுகிறார் கம்பர், பாருங்கள். ராமனுக்கு ஏதோ கோபம் வந்தது. எதற்கு? குருவை விட்டு மெள்ளப் போய்விடுவதற்குத் தானே! அரிய நாடகப் பண்பு இது.

யனை மன்னுவட மதுரை மைந்தனை
தூயபெருநீர் யமுனைத் துறைவனை

யர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கை
தாயைக்குடல் விளக்கம்செய்த தாமோதரனை

யாமாய் வந்து நாம் தூமலர் தூவித்தொழுது
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க

ாயபிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய்

ச் சித்திரம்—4

—ஆண்டாள் திருப்பாவை.






## தோட்டத்தில் நடந்தது!

[ ராஜி ]

நீலம், மணி என்ற இரண்டு முயல்களும் எப்பொழுதும் விளையாடிக் கொண்டே இருக்கும். "புஸ்தகத்தை எடுத்துப் படிப்பதுதானே?" என்று சொல்லுவாள் அவைகளின் தாயார். "இதோ படிக்கிறோம்" என்று இரண்டு முயல்களும் புஸ்தகத்தைக் கையில் வைத்துக் கொண்டு இப்படியும் அப்படியுமாகப் பார்த்துக் கொண்டிருக்கும். தாயார் சமையலறைக்குச் சென்றவுடன் நீலமும் மணியும் மறுபடியும் விளையாட ஆரம்பித்துவிடும். "வர வர விஷமம் தாங்க முடியவில்லை" என்று அடிக்கடி அவற்றின் தகப்பனார் சொல்வார். சொல்லி என்ன பிரயோஜனம்? அவை விஷமம் செய்வது மட்டும் நிற்கவில்லை.

ஞாயிற்றுக்கிழமை யன்று பள்ளிக்கூட விடுமுறையானதால் நீலமும் மணியும் அப்பாவிற்குப் பயந்து புஸ்தகத்தைக் கையில் வைத்துக் கொண்டு மனதிற்குள்ளாகவே படித்துக் கொண்டிருந்தன. படித்துக் கொண்டிருந்தனவே தவிர அவைகளின் ஞாபகம் எல்லாம் தோட்டத்தில் உள்ள மாமரத்தின் மேல்தான். வீட்டுக்குப் பின்புறத்தில் அவைகளுக்குச் சொந்தமான ஒரு பெரிய மாந்தோட்டம் இருந்தது. அத்தோட்டத்திலுள்ள மாமரங்களில் நிரம்ப மாம்பழங்கள் தொங்கிக் கொண்டிருந்தன. நீலத்திற்கும் மணிக்கும் எப்படியாவது தகப்பனாருக்குத் தெரியாமல் மாம்பழங்களைப் பறித்துத் தின்றுவிடுவதென்று யோசனை.



மாலை நாலுமணி இருக்கும். நீலமும் மணியும் யோசித்த வண்ணமாகவே



உட்கார்ந்து கொண்டிருக்கும்பொழுது 'குர், குர்' என்று ஓசை கேட்டது. என்ன ஓசை என்று எட்டிப் பார்க்கும்பொழுது அறையில் தகப்பனார் சுகமாகக் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தன. உடனே புத்தகங்களைக் கீழே வைத்துவிட்டு மெதுவாக நீலமும் மணியும் தோட்டப் பக்கம் சென்றன. அப்பொழுது தோட்டத்தில் ஒருவருமில்லை. மெதுவாக மாமரத்தினருகில் வந்து பழுத்துத் தொங்கும் மாம்பழங்களை அண்ணாந்து பார்த்துக் கொண்டிருக்-

தன; அவைகளுக்கு நாக்கில் ஜலம் ஊற ஆரம்பித்தது.

அப்பொழுது 'நீலம்!' என்று ஒரு குரல் கூப்பிட்டது. அதே குரல் 'மணி!' என்றும் கூப்பிட்டது. அக் குரல் தகப்பனாருடையது என்று அறிந்தவுடன் நீலத்திற்கும் மணிக்கும் தூக்கி வாரிப் போட்டது. தங்களைத் தேடிக் கொண்டு தகப்பனார் தோட்டப் பக்கம் வருவார் என்பது அவைகளுக்கு நன்றாகத் தெரியும். தகப்பனாருக்குத் தெரியாமல் தோட்டத்தில் ஒளிந்து கொள்ள இங்கும் அங்குமாகச் சுற்றிச் சுற்றி வந்தன. ஒளிந்து கொள்ளச் சரியான இடமே அகப்படவில்லை. தகப்பனார் வந்துவிடப் போகிறாரே என்ற பயம் ஒரு பக்கம். ஓடி ஒளிய இடமில்லையே என்ற கவலை ஒரு பக்கம்.

அப்பொழுது நீலத்திற்கும் மணிக்கும் ஒரு யோசனை தோன்றிற்று. அவசரம் அவசரமாகப் பெரிய காலியான பூஞ்சட்டிகள் இரண்டை மற்றையப் பூஞ்செடிகளின் பக்கத்தில் வைத்தன. பக்கத்திலிருக்கும் பூஞ்செடிகளிலிருந்து சிறிய சிறிய இலைகளைப் பூக்களுடன் ஒடித்தன. நீலத்தின் தலையில் சுற்றி வரிசையாக வைத்து மணி கட்டிற்று. அதே மாதிரியாகவே மணியின் தலையில் நீலம் கட்டிற்று. இரண்டும் இரண்டு பூஞ்சட்டிகளில் தலையைக் குனிந்து கொண்டு உட்கார்ந்தன. வெளிப் பார்வைக்குத் தொட்டிகளில் நீலமும் மணியும் உட்கார்ந்திருப்பதாகத் தெரியவில்லை. இரண்டு பூஞ்செடிகள் வளர்ந்திருப்பது போலவேதான் இருந்தது!



அச்சமயம் 'நீலம்! மணி!' என்று கோபத்துடன் உரக்கக் கத்திக் கொண்டே தகப்பனார் தோட்டப் பக்கம் வந்தார். தோட்டத்திலும் அவர்களைக் காணவில்லையே என்று தகப்பனார் சொல்லியதைக் கேட்ட நீலமும் மணியும் தங்கள் சூழ்ச்சி பலித்தது என்று சந்தோஷம் கொண்டன. சற்று நிச்சப்தமாக இருக்கவே தகப்பனார் போய் விட்டார் என்று நிச்சயித்தன. எழுந்திருக்கலாமா என்று அவை யோசித்தபோது, உடம்பில் ஏதோ ஜில்லென்று பட்டது. ஜில்லிப்பு வர வர அதிகம் ஆயிற்று. ஜிலலிப்பை நீலமும் மணியும் தாங்க முடியவில்லை. என்ன காரணம் என்று மேலே பார்த்தன. மேலேயிருந்து ஜலத் துளிகள் அவைகள் மீது 'பொல பொல' வென்று விழுந்து கொண்டிருந்தன. "மழை! மழை! உள்ளே ஓடுவோம!" என்று கூச்சலிட்டுக் கொண்டே நீலமும் மணியும் எழுந்தன.

அப்பொழுது என்ன ஆயிற்று தெரியுமா? அவைகளின் தகப்பனார் ஒவ்வொரு புஷ்பச் செடிக்கும் தண்ணீர் விட்டுக் கொண்டே நீலமும் மணியும் உட்கார்ந்த சட்டிகளுக்கும் தண்ணீர் விட வந்தார். நீலமும் மணியும் எழுந்தவுடன் தங்கள் தகப்பனாரைப் பார்க்கவே அவைகளுக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. குழந்தைகளின் வேஷத்தைக் கண்ட தகப்பனார் குபீரென்று சிரிக்கவே, நீலமும் மணியும் வெட்கப்பட்டுத் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டன. இனி மேல் அப்பாவை ஏமாற்றப் பார்ப்பதில்லையென்று அவை தீர்மானித்தன.



CAUVERY BRAND




# BLEACHING POWDER

STANDS *between* CHOLERA & YOU

THE METTUR CHEMICAL & INDUSTRIAL CORPORATION LTD.

METTUR DAM, SOUTH INDIA.



# காலக்ஷேபம்

## பிறருக்கு உபகாரம்

**மனைவி :**—அய்யாசாமிக்கு தாங்கள் ஏதோ உபகாரம் செய்ததாக அவர் அடிக்கடி சொல்லிக் கொண்டிருக்கிருரே என்ன அப்படி உபகாரம் செய்தீர்கள்.

**புருஷன் :**—நான் ஒன்றும் செய்ய வில்லை. தற்செயலாக நேர்ந்ததையும் நான் வேண்டுமென்றே செய்ததாக அவர் நினைத்துக் கொண்டார்.

**மனைவி :**—அப்படி என்ன உபகாரம் செய்ய நேரிட்டது?

**புருஷன் :**—வேறொன்றும் இல்லை; அவன் உன்னைக் கலியாணம் செய்து கொள்வதாக இருந்தானும்; அதற்குள் நான் உன்னைக் கலியாணம் செய்து கொண்டேனும்! —**ந. இராமதுரை.**

* * *

## யாருக்கு ?

**ஒருவர் :**—என்னடா வாக, பார்க்காதது போல் போகிருயே. வென்னெழுந்தா என்ன ?

**மற்றவர் :**—தயவு செய்து மன்னிக்க வேண்டும்; நான் வாக இல்லை.

—**வி. சுப்ரமண்யன்.**

* * *

## அனர்த்தம்

**பையன் :**—ஒரு நெருப்புப் பெட்டி என்ன விலை ?

**கடைக்காரர் :**—அரையணு ?

**பையன் :**—டசனு வாங்கிக்கிட்டா ?

**கடைக்காரர் :**—அதே விலைதான்......

**பையன்** (அரையணுவைக் கொடுத்து) :—அப்படின்னு, இந்தா......ஒரு டசனுகவே கொடுத்துடு.

**எஸ். எம். சுந்தராம்பாள்.**

* * *

## மூன் ஜாக்கிரதை

**சாஸ்திரிகள் :**—''வருகிற பௌர்ணமி, உங்கள் தகப்பனுர் சிரார்த்தம்......''

**கிரகஸ்தர் :**—'' ஆமாம். அதற்கு இப்போது என்ன ?''

'' ஒண்ணுமில்லே ! வேஷ்டிக்குப் பதிலா ஒரு காலன் மண்ணெண்ணெயும் இரண்டு டஜன் நெருப்புப் பெட்டியும் கொடுத்தால் பிதுர்க்களுக்குத் திருப்தியாயிருக்கும்.'' —**வி. முத்துசாமி.**

## நல்ல பொருத்தம்

**மாப்பிள்ளை வீட்டார் :**—பெண்ணிற்கு வீட்டு வேலைகளெல்லாம் செய்யத் தெரியுமா ?

**பெண் வீட்டார் :**—என்ன பிரமாதம்? இரண்டு மாதங்களுக்குள் கற்றுக் கொண்டு விடுவாள். மாப்பிள்ளைக்கு என்ன வேலை ?

**மாப்பிள்ளை வீட்டார் :**—வேலையா ? என்ன பிரமாதம்? இரண்டு மாதத்தில் வேலை சம்பாதித்துக் கொள்வான்.

—**என். முத்தையா.**

* * *

## உண்மை

**வக்கீல் :**—உங்கள் தம்பி வாக்குமூலத்தினுல்தான் கேஸ் ஜயித்தது. இல்லாவிட்டால், கோவிந்தாதான்.

**கட்சிக்காரன் :**—ஐயா, நிஜத்தைச் சொன்னதற்கு வந்தனம். பீஸ்பணத்தை என் தம்பிக்கே கொடுத்து விடுகிறேன்.

—**எம். எஸ். ஸகுந்தலா.**

* * *

## நல்ல யோசனை !

ஒரு கனவான் ஒரு நாள் தன் வேலையாளைத் தபாலாபீஸுக்குச் சென்று தனக்கு வரும் கடிதங்களை வாங்கி வரச் சொன்னுர். அவன் போஸ்டாபீஸுக்குச் சென்று தபால்காரனை '' எங்க ஐயா கடுதாசுங்களைக் கொடுங்க '' என்று கேட்டான்.



**தபால்காரன் :**—உங்க ஐயா விலாசம் என்ன ?

**நாட்டுப்புறத்தான் :**—அதான் கடுதாசி மேலேயே எழுதிருக்குமே ! அதைப் பார்த்துக்கிட்டுக் குடுங்க.

—**பி. ராமமூர்த்தி.**

# பூப்பிரதட்சணம்

"வஸந்தன்"

உலகத்தில் எவ்வளவோ பேர்கள் தங்கள் ஆசைகளை மனம்விட்டு வெளியில் காட்டிக் கொள்வதில்லை. ஆனல் சுந்தரராமன் விஷயம் அப்படியல்ல. ஒரு நாளைக்குப் பத்துத் தடவையாவது தன் மனதிலுள்ள ஆசையை வெளியிட்டுத்தானாக வேண்டும். அவன் சிநேகிதர்களும் தினமும் அதை அவன் வாயிலிருந்து வரவழைத்துக் கேட்டு மகிழ்ந்து விட்டுத்தான் தூங்குவார்கள்.

இந்த இடத்தில், 'ஹனி மூன்' என்று ஆங்கிலத்தில் சொல்கிறார்களல்லவா, அதற்கு தமிழில் அர்த்தம் சொல்லிவிட வேண்டியது அவசியம். கல்யாணமான பிறகு மணமகன் மனைவியை அழைத்துக் கொண்டு எங்கேயாவது மனோஹரமான இடத்திற்கு உல்லாஸ யாத்திரை கிளம்பி விடுவான். இந்த உல்லாஸ யாத்திரையை அல்லது 'ஹனி மூனை' புதுத் தம்பதிகள் மிகவும் ஆனந்தமாகக் கழிப்பார்கள். பிற்பாடு, வாழ்க்கையில் தம்பதிகள் சண்டை போட்டுக் கொள்ளும்போதெல்லாம் இந்த 'ஹனிமூனை' ஞாபகம் வைத்துக் கொண்டு சமாதானமாய்ப் போய் விடுவார்களென்றால் அது எவ்வளவு இன்ப நினைவுகளை உண்டாக்க வேண்டும் என்று சொல்ல வேண்டியதில்லை.

கதாநாயகன் சுந்தரராமனைப் பற்றிச் சொல்லிவிட்டு 'ஹனி மூனையும்' பற்றிச் சொல்வதால், வாசகர்கள் இரண்டுக்கும் முடிச்சுப் போட்டுக் கொள்வதில் கஷ்டமிராது. உண்மையில் 'ஹனி மூனில்' தனக்குள்ள ஆசையை அடிக்கடி வெளியிடுவதில் சுந்தரராமன் அபாரப் பிரியம் கொண்டிருந்தான். அதுவும் அவன் 'ஹனிமூனை' அமெரிக்காவிலுள்ள மியாமி என்ற மனோஹரமான இடத்தில் கழிக்கப் போவதாகச் சொல்லும்போது, அவன் நண்பர்கள் விழுந்து விழுந்து சிரிப்பார்கள்.

"ஆமாம்; இப்பொழுது சிரிப்பாகத்தான் இருக்கும். ஆனல் நாளைக்கு நான் ஒரு பணக்காரப் பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்டு மியாமிக்குக் கப்பலில் புறப்படும்போது, பொறாமையால் தேய்ந்தே போவீர்கள்." என்று சுந்தரராமன் சபிப்பான்.

"நீ கல்யாணம் செய்து கொள்ளப் போகும் அந்தச் சீமாட்டி யார்? நிஜத்தைச் சொல்லிவிட்டால் நாங்கள் சத்தியமாகப் பொறாமையால் தேய்ந்து சாக மாட்டோம்" என்று நண்பர்கள் பிடிவாதம் செய்வார்கள்.

மேற்படி நெரடலான கேள்விக்குப் பதில் கொடுப்பதுதான் சுந்தரராமனுக்குக் கஷ்டமாக இருந்தது. தனக்குக் கிடைக்கப் போவதென்னமோ ஒரு சீமாட்டிதான் என்பதில் அவனுக்குச் சந்தேகமில்லை. ஆனல் அந்த சீமாட்டி யார், எங்கேயிருக்கிறாள் என்பது தான் அவனுக்குத் தெரியவில்லை.

"பயல்களா! கேலியா பண்ணுகிறீர்கள்! கொஞ்ச நாள் பொறுங்கள், மியாமி மட்டுமில்லை; உலகத்தையே நான் சுற்றி வருகிறேனா, இல்லையா என்று பாருங்கள்" என்று சொல்வான்.

## 2

"கணகண" வென்று வாசலில் ஸைகிள் மணியோசை கேட்டது. சுந்தரராமன் ஸைகிளிலிருந்து இறங்கி, கையில் டென்னிஸ் 'ராக்கட்'டைச் சுற்றிக் கொண்டு உள்ளே நுழைந்தான். அப்பொழுது திண்ணையில் உட்கார்ந்து கொண்டு யாரோ ஒரு சிநேகிதருடன் பேசிக்கொண்டிருந்த அவன் தகப்பனார் சங்கர ஐயர் சுந்தரராமனைப் பார்த்துப் பெருமூச்சு விட்டார். அவர் வேதனையால் கஷ்டப்படுகிறாரென்பதை வந்தவர் தெரிந்து கொண்டார். "ஐயர்வாள்! பையனைப் பார்த்து விட்டுப் பெருமூச்சு விடுகிறீர்களே! எனக்கு என்னமோ வயிற்றைச் சங்கடம் செய்கிறது. ஜோஸ்யன்கள் ஆயுளைப் பற்றி ஏதாவது தத்துப் பித்தென்று உளறி விடுவான்கள். அதை நம்பிக்கொண்டு நீங்கள்..."

"ஆயுளைப் பற்றி எண்ணித் துக்கப்படவில்லை. அவன் கல்யாணத்தை நினைத்துத்தான் துக்கப்படுகிறேன்."

"கல்யாணத்தைப் பற்றி என்னத்திற்காகத் துக்கப்படுகிறீர்கள்."

"அந்தக் கதையை ஏன் கேட்கிறீர்கள். பையனுக்கு வயசோ முப்பது ஆகப் போகிறது. எவ்வளவோ வரன்களைத் தட்டிக் கழித்து விட்டான். தலையோ வழுக்கை விழுந்து விடும் போலிருக்கிறது. அவனுக்குக் கல்யாணமாகி நான் எப்பொழுது பார்க்கப் போகிறேன்?" என்று துக்கத்துடன் சொல்லி விட்டுப் பிள்ளையாண்டான் ஏதேதோ உளறிக் கொண்டிருப்பதைப் பிரஸ்தாபித்தார்.

"நீர் இதற்காகக் கவலைப்படாதேயும். இன்னும் ஒரு வாரத்திற்குள் அவனுக்குச் சரியான இடத்தில் கல்யாணம் முடித்து வைக்கிற பொறுப்பு என்னுடையது...இப்படி வாரும். ரகசியமாக ஒரு விஷயம் சொல்கிறேன்" என்று சொல்லிச் சங்கர ஐயரைத் தனியாக அழைத்துக் கொண்டு போனார் நண்பர்.

## 3

சுந்தரராமன் அவனுக்கு மிகவும் பிடித்தமான நீல ஸில்க் சட்டையை அணிந்து கொண்டான். அதற்கு மேல் ஒரு ஜரிகை அங்க வஸ்திரத்தை எடுத்துப் போட்டுக் கொண்டான். ஜரிகை அங்க வஸ்திரத்தையும் ஸில்க் ஷர்ட்டையும் போட்டுக் கொண்டாலொழிய எந்த மனிதனும் ரஸிகனாக இருக்க முடியாதென்பது அவன் எண்ணம். சாதாரணமாக, சங்கீதக் கச்சேரிகளுக்கே அவன் இவ்வளவு ஆடம்பரத்துடன் செல்லும் போது, பெண்ணைப் பார்க்கப் போகும் போது எவ்வளவு முறுக்காக 'டிரஸ்' செய்து கொண்டிருக்க வேண்டும்?

"சுந்தரராமா! மாப்பிள்ளை அழைப்பு ஊர்வலத்துக்குப் புறப்படும் போது உனக்கு நிரம்ப அவகாசம் தரச் சொல்கிறேன். இப்பொழுது தயவு செய்து சீக்கிரம் புறப்பட்டுவிடு" என்று தகப்பனார் கெஞ்சியதன்பேரில், சுந்தரராமன் "இதோ வந்து விட்டேன்" என்று உள்ளேயிருந்து கத்தினான்.

"அப்பா! பெண்ணுக்கு எவ்வளவு சொத்து இருக்கிறது என்று சொன்னீர்கள்?" என்று உள்ளேயிருந்து மறுபடியும் சுந்தரராமன் குரல் வந்தது.

"எவ்வளவோ லக்ஷம். அதை ஏன் கேட்கிறாய்? அவள் பெரிய ஜமீந்தாரிணி என்றுதான் சொன்னேனே. தகப்பனாருக்கு ஒரே பெண்ணும். பட்டணத்துலே நாலு பங்களா. நீலகிரியிலே ஒன்று. பம்பாயிலே ஒன்று."

"அப்பா! இவ்வளவு பங்களா என்னத்துக்கு? அதிலே போட்டிருக்கிற பணத்தை எடுத்து நிலத்திலே போட்டு விட்டால் இந்த யுத்த சமயத்தில் எவ்வளவு நன்றாயிருக்கும்?"

"நீ அவளைக் கல்யாணம் செய்து கொண்ட பிறகு செய்ய வேண்டிய முதல் காரியம் அதுதான். புறப்படு. அவர்கள் கார் அனுப்பி எத்தனை நாழிகை ஆயிற்று?"



"வேண்டாம், வெற்றிலை போட்டுக்கொள்ளும் வழக்கமில்லை"

சுந்தரராமனையும், அவன் தகப்பனாரையும் அழைத்துக் கொண்டு அந்தக் கார் பங்களா காம்பவுண்டுக்குள் திரும்பிற்று. காரில் இருந்தபடியே சுந்தரராமன் மாடியில் ஒரு உருவம் பளிச்சென்று தோன்றி மறைவதைப் பார்த்து விட்டான். என்ன காரணத்தினாலோ அவன் உடம்பு ஒரு தடவை வியர்த்தது.

"இதோ இறங்கேன்!" என்று தகப்பனார் சொல்லியது கூட மங்கலாகத்

தான் அவள் காதில் விழுந்தது. ஏனென்றால், சுந்தரராமன் அப்பொழுது பலத்த யோசனை செய்து கொண்டிருந்தான்.

"வாருங்கள்! முதலில் போய்ப் பெண்ணைப் பார்த்து விட்டு வந்து விடுங்கள்" என்று அவனை வரவேற்று உள்ளே அழைத்துக்கொண்டு போனார் தகப்பனாரின் சிநேகிதர். மேன் மாடியில் ஒரு பெரிய ஹாலில் சுந்தரராமன் உட்கார்ந்து கொண்டிருந்தான். அந்த ஹாலிலுள்ள ஜோடனைகளை எல்லாம் பார்த்தால் பெரிய பிரபுவைத் தவிர அந்த வீடு வேறு யாருக்கும் லாயக்கில்லை என்று சொல்லி விடலாம்.

தகப்பனார் சுந்தரராமனை அங்கே உட்கார வைத்து விட்டு நாஸ்டாக்காக வெளியே போய்விட்டார். இந்த சமயத்தில்தான் ஒரு திரை விலகிற்று. எதிரே ஒரு தந்தப் பதுமை அவனை நோக்கி நடந்து வருவதுபோல் தோன்றிற்று. அப்பொழுது அருகிலிருந்த தினசரியைப் படிப்பதுபோல் சுந்தரராமன் பாவனை செய்தான். ஆனால் அந்த உருவத்தின் மேல் வைத்த கண்ணை மட்டும் அவனால் எடுக்க முடியவில்லை.

அந்தப் பெண்ணை முதன் முதலில் மாடியில் பார்த்தபோது ஏற்பட்ட திக்பிரமை எல்லாம் ஒரு நொடியில் விலகிற்று. சுந்தரராமன் முகத்தில் ஒரு புன்னகை அரும்பிற்று.

"வேண்டாம், வேண்டாம்! வெற்றிலை போட்டுக் கொள்ளும் வழக்கம் இல்லை" என்றான் சுந்தரராமன்.

அந்தப் பெண் வெற்றிலைத் தட்டை மேஜை மீது வைத்து விட்டு அவனை நமஸ்கரித்தாள்.

"இப்படி உட்கார்ந்து கொள். உன் பெயர் என்ன?" என்றான் சுந்தரராமன்.

"வத்ஸலா!" என்றாள் அவள். குபீரென்று அவள் முகம் சிவந்தது. சுந்தரராமன் வைத்த கண்ணை எடுக்காமல் அவளை விழுங்கி விடுபவன்போல் பார்த்தான்.

"உன் மாதிரி ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்று இத்தனை நாளாகத் தேடிக் கொண்டிருந்தேன்."

"பணக்காரப் பெண்ணாகப் பார்த்துத்தான் கல்யாணம் செய்துகொள்ள

வேண்டுமென்று இருந்தீர்களாக்கும்" என்று திடீரென்று கேட்டாள் வத்ஸலா. சுந்தரராமனுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

"இவ்வளவு சங்கோஜப் படுகிறாள் என்று நினைத்தோமே. எப்படி வெடுக்கென்று கேட்டாள்? இந்தப் படித்த பெண்களே இப்படித்தான்" என்று நினைத்துக் கொண்டான் சுந்தரராமன்.

"சேச்சே! நான் அப்படி ஒன்றும் பண ஆசை பிடித்தவன் அல்ல. இந்த உலகத்தில் பணமா பெரிது? குணம்தான் முக்கியம்" என்றான் சுந்தராமன். அவன் முகத்தில் ஒரு குறும்புச் சிரிப்புத் தாண்டவமாடிற்று.

"என்னைப் பணத்திற்காகத்தானே கல்யாணம் செய்து கொள்கிறீர்கள்?" என்றாள் ஜமீந்தாரிணி.

"ராம, ராம! நீ பரம ஏழையாக இருந்தால் கூட உன்னைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன்."

வத்ஸலா ஏதோ சொல்ல வாயெடுத்தாள். வார்த்தை வெளியில் வரவில்லை.

சுந்தரராமன் எழுந்திருந்தான். "வத்ஸலா! உன்னுடன் ரொம்ப ரொம்ப விஷயங்கள் பேச வேண்டும். அதெல்லாம் கல்யாணத்துக்குப் பிறகு" என்றான். வத்ஸலா அப்பொழுதும் ஏதோ சொல்ல முயன்றாள். "சொல்லி விடலாமா?" "சொல்லி விடலாமா?" என்று அவள் மனத்தில் போராட்டம் உண்டாயிற்று.

"இந்தாருங்கள்! உங்கள் தகப்பனார் சொல்வதுபோல் நான் பணக்காரியல்ல; நான் ஏழைதான். என் அண்ணாவும், உங்கள் அப்பாவின் சிநேகிதரும் சேர்ந்து கொண்டு இந்த நாடகத்தை........." என்று கடைசியில் சொல்லிவிட்டு நிறுத்தினாள் வத்ஸலா.

"நீ சேஷாத்ரியின் தங்கை யென்று எனக்குத் தெரியாதா, வத்ஸலா! வரும்போதே மேல் மாடியில் உன்னைப் பார்த்ததுமே எனக்குப் புரிந்து போயிற்று. என் பிடிவாதத்தைப் பார்த்து ஏமாற்றியாவது எனக்குக் கல்யாணம் செய்து விடலா மென்று தீர்மானித்து விட்டார்கள்! அவர்களுடன் சேர்ந்து கொண்டு முதலில் நீயும் என்னை ஏமாற்றி விடலாமென்று தானே முட்டாள்தனமாக நினைத்தாய். ஆனால் ஒரு பணக்காரியைக் கல்யாணம் செய்து கொள்வதைவிட உன்மாதிரி முட்டாளைக் கல்யாணம் செய்து கொள்வதற்கு நான் தயார்" என்றான் சுந்தரராமன்.

## 4

கல்யாணமான பிறகு ஒருநாள் தம்பதிகள் ஸ்வாரஸ்யமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"அண்ணா என்னை ரொம்ப ரொம்பக் கேலி செய்கிறான்" என்றாள் வத்ஸலா. அவள் கண்களில் ஜலம் வந்துவிடும் போலிருந்தது.

"என்ன சொல்கிறான்? விஷயத்தைச் சொல்" என்று கைச் சட்டையை மடித்துவிட்டுக் கொண்டான் சுந்தரராமன்.

"நீங்கள் கல்யாணம் பண்ணிக் கொண்டு உலகத்தைச் சுற்றி வரப் போவதாகச் சிநேகிதர்களிடம் சொன்னீர்களாம். 'எப்பொழுது புறப்படப் போகிறீர்கள்' என்று கேட்கிறான்."

"அந்த மண்டுவிடம் சொல். நீதான் எனக்கு உலகம் இலகம் எல்லாம். உன்னை ஓயாமல் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கிறேன் என்று சொல்கிறதுதானே!" என்றான் சுந்தரராமன்.

"சபாஷ்!" என்று அப்பொழுது ஒரு குரல் கேட்டது. அது சேஷாத்ரியின் குரல்தான் என்று தெரிந்துகொண்டதும், தம்பதிகள் இருவரும் வேகமாகத் தங்கள் அறைக்குள்ளே போய்க் கதவைத் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டார்கள்!

# பழிவாங்கிய படலம்

"ஸோமாஸ்"

அன்று ஞாயிற்றுக்கிழமை யாதலால் சங்கரன் மிகவும் சாவதானமாகச் சாய்வு நாற்காலியில் சாய்ந்துகொண்டு ஏதோ ஒரு நாவலைப் புரட்டிக் கொண்டிருந்தான். வனஜா அவனருகில் உட்கார்ந்து கொண்டிருந்ததை அவன் கவனிக்கவில்லை.

"தினந்தோறும் அவசரம் அவசரமாகச் சாப்பிட்டு விட்டு ஆபீஸுக்குப் பறக்க வேண்டி யிருக்கிறது. இன்றைக்கு ஞாயிற்றுக்கிழமைதானே! இன்றைக்காவது சாவகாசமாகப் பேசிக் கொண்டிருக்கப் படாதோ?" என்று வனஜா கேட்டதும்தான் சங்கரனின் நாவல் சமாதி கலைந்தது. வனஜாவைக் கடைக்கண்ணால் ஒரு பார்வை பார்த்து விட்டு மறுபடியும் சங்கரன் நிஷ்டையி லாழ்ந்தான்.

வனஜா, "அப்படியென்ன பிரமாதமான நாவல் அது? இருக்கட்டும், உங்களை ஒரு கேள்வி கேட்க வேண்டும் என்னும் ஆசை ரொம்ப நாளாக என் மனதில் கிடந்து தவிக்கிறது" என்றாள்.

சங்கரன் திடீரென்று புத்தகத்தை மூடி வைத்து விட்டு, "அது என்ன கேள்வி?" என்று கேட்டான்.

"என்னை நீங்கள் விவாகம் செய்து கொள்வதற்கு முன்பு தாங்கள் யாருடனாவது காதல் கொண்டதுண்டா?"

"வனஜா, காதலாவது மண்ணாங் கட்டியாவது? வெள்ளைக்கார தேசத்திலல்லவா இப்படி யெல்லாம் கேட்பார்கள்? என்னத்துக்காக இப்படிக் கேட்கிறாய்?" என்றான் சங்கரன் அலுப்புடன்.

"நம்மிருவ ரிடையேயும் எப்படிப்பட்ட ரகசியமும் இருக்கக்கூடாது என்று முன்பே பேசிக் கொண்டிருக்கிறோ மல்லவா?"

"ஆமாம். யார் இல்லை யென்கிறார்கள்? நீ சில விஷயங்களைத் தெரிந்து கொள்ளாம லிருப்பதே நல்லது" என்றான் சங்கரன்.

"பார்த்தீர்களா, பார்த்தீர்களா? இந்த ரகசியங்களைத்தான் நீங்கள் தனியாக மனதில் வைத்துத் துன்பப்படக் கூடாது. நான் உங்கள் வாழ்க்கைத் துணையல்லவா? உங்கள் சுகதுக்கங்களில் எனக்கும் பங்குண்டு. அதே மாதிரி ரகசியங்களிலும்.........!" என்றாள் வனஜா.

"சரி, நீ சொல்லத்தான் வேண்டுமென்று வற்புறுத்துவதால் சொல்லுகிறேன். அவைகளையெல்லாம் கேட்டால் உன் மனசுக்கு மிகவும் வருத்தமா யிருக்கும்."

"பரவாயில்லை, சொல்லுங்கள்."

"நான் எத்தனை பெண்களுடைய பெயர்களைச் சொல்வதென்று தெரியவில்லையே! ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதத்தில் என் மனதுக்குப் பிடித்திருந்தார்கள்" என்றான் சங்கரன்.

"அப்படியானால்......" என்று சொல்லி நிறுத்தினாள் வனஜா. அவள் குரலில் சோகம் இலேசாகப் படர்ந்திருந்தது.

"வனஜா, இந்த விவகாரத்தை இத்துடன் விட்டு விடுவோம். இது அனாவசியமான விவகாரம்."

"முடியவே முடியாது. தாங்கள் எல்லாவற்றையும் சொல்லித்தானாக வேண்டும்."

"இதிலே ரொம்ப சிக்கல் இருக்கிறது. விவரமாகச் சொல்ல முடியாது. நான் உன்னை விவாகம் செய்து கொள்வதற்காகத்தான் ஊரெல்லாம் தேடிக் கொண்டிருந்தேன்."

"கடைசியில் என்னைக் கண்டு பிடித்தீர்களாக்கும்!" என்று கூறி முகத்தைக் கோணிக் கொண்டாள் வனஜா.

"நீ காதல் என்பதற்கு என்ன அர்த்தம் பண்ணுகிறாயோ எனக்குத் தெரியாது. அதில் பல படிகள் உண்டு என்று உனக்குத் தெரியுமோ இல்லையோ?" என்று கேட்டான் சங்கரன்.

"காதலைப் பற்றிய வேதாந்தம் எனக்கு வேண்டாம். தாங்கள் முதலில் காதலித்த பெண் யார் என்பதைச் சொல்லுங்கள்" என்றாள் வனஜா.

"நான் உனக்கு ஒவ்வொருவராக விவரம் கூறிக் கொண்டிருந்தால் அடுத்த ஞாயிற்றுக் கிழமை வந்துவிடும்."

"அட ராமச்சந்திரா, எத்தனை பெண் என்றாவது தெரிவியுங்களேன்!"

"எழுபது பேர்!"

"நான் எழுபத்தொன்றாவது பெண் போலிருக்கிறது." என்று கூறி, வனஜா குபு குபு வென்று கண்ணீர் பெருக்கினாள்.

"நீ வருத்தப்படுவாய் என்றுதான் நான் சொல்ல மறந்தேன்!"

"சரி. அவர்களெல்லோரும் என்னைவிட அழகானவர்களா?" என்று வனஜா கண்ணைத் துடைத்துக்கொண்டே கேட்டாள்.

"அவர்கள் உன்னைவிட அழகிற் சிறந்தவர்களாயிருந்தால் உன்னை ஏன் விவாகம் செய்து கொள்ளவேண்டும்? சற்று முன் அழுதாய், அதற்குள் சிரிக்கிறாயே!"

"இல்லை. தாங்கள் அந்த எழுபது பேர்களையும் விவாகம் செய்து கொண்டிருந்தால் என்னமாயிருந்திருக்கும் என்று யோசித்துப் பார்த்தேன். சிரிப்பு வந்து விட்டது!"

சங்கரன் நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டு, "வனஜா, நீ என்னைப்போன்ற வாலிபர்களைப் பற்றிய விவரங்களையறிந்தால் என்மீது குறைகூற மாட்டாய். நமக்குள் காதல் ஏற்பட்டா நாம் விவாகம் செய்து கொள்கிறோம்? பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளுக்குப் பெண் தேடுகிறார்கள். என் இருபதாவது வயதிலிருந்து எனக்கு வந்த பெண் ஜாதகங்களுக்குக் கணக்கு வழக்கில்லை. இருபத்து மூன்றாவது வயதில் உன்னைக் கல்யாணம் செய்து கொண்டேன். இந்த மூன்று வருஷங்களுக்குள் நான் எழுபது பெண்களைப் பார்த்தேன். அவர்களைச் சற்று என் மனதுக்குப் பிடித்திருந்த படியால் காதலித்ததாகக் கூறினேன். நான் உன்னை ஒரு தரம் பார்த்ததும் விவாக ஏற்பாடாகி விட்டது. விவாகத்துக்குப் பின் நம் புண்ணிய வசத்தால் நாம் எவ்வளவோ சந்தோஷமாயிருக்கிறோம்" என்று கூறி முடித்தான்.

வனஜா சந்தோஷத்துடன், "நான் தாங்கள் உண்மை கூறுகிறீர்களா என்பதற்காகக் கேட்டேன். மன்னிக்கவேண்டும். வித்தியாசமாய் நினைக்கக்கூடாது" என்று கூறித் திருப்தியடைந்தாள்.

"வித்தியாசம் ஒன்றும் இல்லை. எங்கே? நான் கேட்பதற்கு நீ உண்மையாகப் பதில் சொல்லு. விவாகம் ஆவதற்கு முன் எவ்வளவு வாலிபர்கள் மீது நீ காதல் கொண்டாய்?"

"இப்படிக் கேட்பதற்கு உங்களுக்கு வெட்கமாயில்லையா?"

"நான் உண்மையைக் கூறிவிட்டேன். நீயும் கூறித்தான் ஆக வேண்டும்."

வனஜாவுக்கு இன்னது செய்வது என்று தோன்றவில்லை. "நீங்கள் கட்டாயப் படுத்தியதால் சொல்லுகிறேன். கோபித்துக் கொள்ளாமல் கேட்க வேண்டும்."

"இல்லை. சொல்லு."

வனஜா அவன் முகத்தை நோக்கியபடியே, நிஜத்தைச் சொல்லி விடுகிறேன். "ஒரு வாலிபர் என்னிடம் அன்பு காண்பித்தார்" என்றாள்.

"பேஷ்!" என்றான் சங்கரன். அவன் முகத்தில் ஈயாடவில்லை.

"பார்த்தீர்களா? கோபிக்க மாட்டேனென்றீர்களே! அந்த அன்பு நாளாக ஆகத் தீவிரமாக வளர ஆரம்பித்தது. நானும் பதிலுக்கு என் அன்பைத் தெரிவித்தேன்."

"பலே, சபாஷ்!" என்று சங்கரன் சொல்லும்போது முகத்திலே அசடு தட்டிற்று.

"சரி. இனி இந்த விஷயத்தை இத்துடன் நிறுத்திக்கொள்ள வேண்டியதுதான்" என்று அழுத்தமாகக் கூறி எழுந்திருந்தாள் வனஜா.

"ஆரம்பித்த விஷயத்தை முடித்துத்தான் ஆக வேண்டும்" என்று கூறி, சங்கரன் அவள் கையைப் பிடித்து அமர்த்தினான்.

"அப்படியானால் சொல்லுகிறேன். அந்த வாலிபர் காலேஜில் படித்துக் கொண்டிருந்தார். அவர் வீடு முறைக்கு வரும்பொழுதெல்லாம் எனக்குப் பலவித சாமான்கள் வாங்கி வருவார். அவரைப் பார்ப்பதற்கு எனக்கு ஆசையாய்த் தானிருந்தது."

"இருக்காதா பின்னே?" என்று சங்கரன் சொல்லும்போது அவன் குரல் கொஞ்சம் ஈனமாக மாறியிருந்தது.

வனஜா சிரித்துக்கொண்டே, "இல்லாமலா தாங்கள் காதலிக்கும் மனைவியாயிருக்கிறேன்? நம் கல்யாணத்துக்கு முன்னாடி நடந்த சம்பவங்களையெல்லாம் இவ்வளவு சீக்கிரம் ஏன் மறந்து விட்டீர்கள்?" என்று கேட்டாள்.

"இத்தனை நாழிகை என்னைப் பற்றித்தானா சொல்லிக்கொண்டிருந்தாய்? ஆமாம்; நான்தான் காலேஜிலிருந்து வரும்போது உனக்குச் சாமான்களெல்லாம் வாங்கிக் கொண்டு வருவேன். அப்பொழுதெல்லாம் எவ்வளவு சந்தோஷமாயிருந்தோம்? ஆனால் என்னைப்பற்றித்தானே சொன்னாய்?"

"ஈச்வரா! அதிலே என்ன சந்தேகம்?" என்று கேட்டாள் வனஜா. சங்கரன் முகத்தில் பழைய களை வரவில்லை. வனஜா விழுந்து விழுந்து சிரிக்க ஆரம்பித்தாள். "என்ன இருந்தாலும் புருஷர்களுக்குச் சந்தேகம் உண்டோ இல்லையோ....." என்று சொல்லி விட்டு, சங்கரன் கையைப் பிடித்தாள்.

"வனஜா! ஒரு நிமிஷத்தில் என்னைப் பைத்தியக்காரனாக அடித்து விட்டாயே!" என்று சொல்லி விட்டுக் குபீரென்று சிரித்தான் சங்கரன்.

## "எச். எம். வி." ரிகார்டுகளில் துவைத கீதங்கள்



மாஸ்டர்

கருட்டும்

ஸ்ரீமதி

விச்வேச்வரம்மாவும்

பாடியவை

### புதிய வெளியீடு

N. 18202 { ஓர் நவ உலகம் 2 பாகங்கள்

### முன் வெளிவந்தவை

N. 18191 { காதல் இதே / கொஞ்சும் மொழிகள்

N. 18122 { அன்பில் இன்பம் / தெய்வ முக்திக்கும்

N. 18102 { ஆழி தனில் / மன நிறை சுகமே

N. 18028 { லீலா லோலப்ரியா / வினோதமே

N. 18000 { வா வா மனோஹரா / ஆஹா கோகிலமே




எல்லா "எச்.எம்.வி." கிராமபோன் வியாபாரிகளிடமும் ரிகார்டுகள் இன்றே கிடைக்கும்.

## "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"

Regd. No. M. 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy, at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.